உ

சிவமயம்

ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் திருவடி துணை

# இறை ஞான போதம்


ஆசிரியர்

சீலஸ்ரீ மீனாக்ஷிசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உரையாசிரியர்

சைவத்திரு. குரு. வரதராஜப் பிள்ளை B. A. அவர்கள்



காஞ்சி தொண்டைமண்டலாதீனம்

ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலய வெளியீடு

30-12-1966




[விலை 1-00

16/9/2018

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# இறை ஞான போதம்

## உரை

நூலாசிரியர்

சீலஸ்ரீ மீனாட்சிசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

உரையாசிரியர்

**உயர்திரு. குரு. வரதராசப் பிள்ளை B. A. அவர்கள்**

**காஞ்சி தொண்டைமண்டலாதீன வெளியீடு**

31—12—1966.

துரையச்சகம், காஞ்சி.

# நூன்முகம்

'இறை ஞான போதம்' எனப் பெயரிய இஞ் ஞான சாத்திரம் எம் ஞானகுருநாதர் சீலஸ்ரீ மீனாக்ஷிசுந்தரதேசிகபரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவாய் மலர்ந்தருளியது. அவர்கள் இந் நூற்றாண்டில் யாவர்க்கும் கண் கண்ட சிவம்ஆக வாழ்பவர்கள். சூரியனார் கோயி லாதீனத்தில் பதினாலாவது குரு மஹா சந்நி தானம் ஆக வீற்றிருந்தவர்கள். (1918-47) அதனால் அவர்கள் சிவாக்கிர யோகிகள் ஞான பரம்பரையில் உபதேசம் பெற்றவர்கள் எனல் தானே விளங்கும். வடமொழிச் சிவஞான போதத்திற்கு மிகச் சிறந்த பேருரை யெழுதியருளிய சிவாக்கிர யோகிகளது சத்திய ஞானமிர்தம் இப் பெருமானுக்கு வழிவழி வந்த சிவப்பேறுகும். அச்சிவப் பேற்றைத் தாமே முற்றும் அநுபவிக்கலாகாது உலகர் எவரும் அநுபவிக்க வேண்டும் என்று திருவுளத்துக்கொண்ட பெருங்கருணையால், சமயம் விசேடம் நிருவாணம் ஆசாரியாபிஷேகம் சாம்பவ தீக்ஷைகளை அவரவர் பக்குவத்துக்கும் நிலைக்கும் ஏற்றவாறு செய்வித்து அருள் நெறி யொழுக்கத்தைக் கடைப் பிடிக்கவைத்து ஆட்கொண்டருள்கின்றார்கள். இத் தமிழகத்திலும் வேற்று நாடுகளிலும் அப்பேறு வாய்த்துச் சைவா சார சீலர்களாய்ப் பற்பலர் வாழ்கின்றனர். சுருக்கிச் சொல்லின், சோழ நாட்டிலும் பிற நாட்டிலும் பெரும்பாலோர் இஞ் ஞானமூர்த்திமான் சீடர்கள் ஆகவே சிவவழிபாடு செய்து விளங்குகிறார்கள். காஞ்சி சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் (எம் தமிழிலக்கிய இலக்கண, தருக்க, சைவசாத்திர, தீக்ஷா குருநாதர்) அவர்களும் இக் குருமகா சந்நிதானம் அவர்களால் ஆசாரியாபிஷேகமும் ஞானபி ஷேகமும் செய்விக்கப் பெற்றவர்கள்.

அத்தகு மஹத்வம் வாய்ந்த ஞானசாரியர் எம் வேண்டு கோட்குத் திருவுள்ளம் இசைந்து உணர்த்தியருளியது இவ்வுண்மை

நூல். இதனை உரையுடன் வெளியிட்டால் விளக்கம் உண்டாகும் என்று அன்பர் சிற்சிலர் கேட்டுக்கொண்டனர். அதனால், யாம் பாடங் கேட்டவாறு எழுதத் தொடங்கினேம். மறப்பெனும் பகைவன் வாரிக்கொண்ட பல ஒழிய, நின்ற சிலவற்றை இவ்வுரையாக எழுதினேம். இதனை முன்புபோற்றிய எம் குருநாதர் திருக்கண்ணேக் கிற்கு வைக்க எண்ணிக் காஞ்சிக்குச் சென்று காட்டினேம். முற்றும் நோக்கியருளப் பெற்றேம்.

'சிவஞான போதம்' என்னும் தொன்னூலின் வேறு இந்நூல் என்று பெயர் கேட்டபோதே தோன்றற் பொருட்டு, ''இறை ஞான போதம்'' எனப் பெயர் வைக்கலாயிற்று. ''இறை ஞானந் தந்து தாளீதல்'' (சூ.8:-36) என்றும், ''இறைஞானங் கூடுமவர் கூடரிய வீடுங்கூடிக் குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டேயிருப்பர்'' (சூ 10:-5) என்றும் சிவஞான சித்தியாரில் உள்ள குருவாக்கைக் கொண்டே இப் பெயர் தோன்றிற்று. ''இறைவனுவான் ஞானமெல்லாம்......சிவற்கே'' ''இறைவனடியடைவிக்கும் எழின் ஞான பூசை'' ''இறைவனடி ஞானமே ஞானம் என்பர்'' என்னும் சிவாகம வசநங்களால் இப் பெயர்ப் பொருத்தம் இனிது விளங்கும்.

இதில் உணர்த்தப்படுவது நல்ல சிவ முத்தியை அடையும் உண்மை நெறி விளக்கம். அது 'சிவனடியைச்சேரும் முத்தி.' அதுவே ''முன் மார்க்க ஞானத்தால் எய்தும் முத்திமுடிவு''. அம் முக்திக்கு முக்கிய சாதனமாகிய ஞானமே இறைஞானம். இதுவே 'இறைவனடி ஞானம்' (279) 'பதி ஞானம்' (292) 'திருவடி ஞானம்' (295) 'மலரடி ஞானம்' (303) ''ஊன்செய்யா ஞானம்'' (305) 'நின்மல ஞானம்' (308) 'அரன்மலரடி' (310) 'திரு ஞானம்' 'சிவ ஞானம்' (311) 'தெரிவரிய மெய்ஞ்ஞானம்' (313) 'அரன் ஞானக்கண்' (317) 'அடி சேர் ஞானம்' (327) 'பர ஞானம்' (328) என்று சிவஞானசித்தியாரில் வரும் இடமெல்லாம் (இறை ஞானமே) கூறப்பட்டாலும், பக்குவ விசேடத்திற்குத் தக்கபடி வெவ்வேறு நிலையைக் குறித்து வருதல்

அவ்வந் நிலையினர் உணரத்தக்கது. "எவ்விடத்தும் இறையடியை இன்றி அமைந்து ஒன்றை அறிந்து இயற்றிடா உயிர்கள்" என்னும் உண்மையை உணர்ந்து கொள்ளுங்காலம் முதலாக இறை ஞானம் விளங்கும். அவ் விளக்கம் பெறவும் பெறுவதற்கு முன்னர் அதனைக் கேட்டு நினைந்து தெளிந்து நிற்கவும் இந்நூல் உண்மை ஞானத்தில் முதன் முதல் தலைப்பட்டார்க்கு உதவியாதும். ஆகவே இதனைக் கற்பார் தகுதியையும் உணரலாம்.

இந் நூலை அருளிய ஆசிரியர் திருவடிகளையும் இதனைத் திரு நோக்கம் புரிந்தருளிய சீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் திருவடி களையும் முப்பொறித் தூய்மையுடன் போற்றி வணங்கி, இதனை வெளியிட்ட சென்னைச் சைவசித்தாந்த சமாஜத்தின் அறுபத்தொன் றுவது ஆண்டு விழா வரவேற்பு (த்திருச்சிராப்பள்ளி)க் குழுவினர்க்கு எம் நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேம்.

திருச்சிராப்பள்ளி,
31—1—1966.

குரு. வரதராஜன்.

சிவமயம்

## நேரிசையாசிரியப்பா

சீர்வளர் நீர்நிலஞ் செறிவளஞ் சான்று
பார்வளர் வுறவளர் கார்வளர் பொழில்மிகு
சோழநாட் டினிற்செஞ் சுடரவன் கோயில்
வாழ நாட் டியகுரு மரபே திருமர
பப்பெரு மரபில் அவதரித் தருளிய
தப்பரு மருச்சனைத் தண்மலர்த் தொகையாத்
திகழ்சிவக் கொழுந்து தேசிகர் முதலாப்
புகழ்ஈ ரேழாப் பொருந்திய குருபரன்
பண்ணவ ரமுதம் பாற்கடல் கடைந்தவ்
விண்ணவர்க் கின்றி மண்ணவர்க் களித்தருள்
புண்ணியன் நெற்றிக் கண்ணினன் திருவடிக்
கண்ணியர் அனைவரும் பண்ணிய தவப்பயன்
ஒருருக் கொண்டுல குதித்ததென் றுவக்க
நீருருப் பெண்ணும் நிலவும் பிறவும்
மறைத்துவந் தடியேன் மலமகன் றொளிர்வுற
நிறைத்தமெய்ஞ் ஞான நெறியினிற் செறிவுற
நிருவாண தீட்சையும் பெருஞான முழுக்கும்
அருநகர் ஏழனுள் அதிகமுக் கியமாந்
திருநகர் காஞ்சியில் சிவமே யாகிய
ஞானசிற் றம்பல நாடிகள் வழிவரும்
ஞானப்ரகாச நாயகன் பீடமும்
அளித்துவாழ் வித்தருள் ஆசா ரிய மணி
தளித்துச் சைவமும் தமிழ்த்திரு முறையும்
உலகெலாம் போற்றும் உயர்நெறி வளர்த்தவன்
அலகிலாச் சைவர் அரனடிப் பூசையைச்
சிவாகம முறைப்படி செயய்ஆட் கொண்டவன்
நவாகமம் இறையும் நண்ணு நெறியினன்

ஒன்றிலா முப்பதாண் டும்மடத் திறைவ
னென்றிருந் தப்பதம் இகழ்ந்து நீத்தமெய்த்
துறவுபல் லோரும் தொழவுழா துடையவன்
உறவுகாளத்தியுள் ளுறையரன் மலர்க்கழல்
அன்றிவே றில்லா வென்றிகொள் வித்தகன்
கொன்றைமா லேயனுக் குலவியவன் பணி
நின்றுமும் மலமும் நீங்கியும் தன்னடி
யார்க்கெலாம் நீக்கிமெய் யாக்கிடும் நோக்கமும்
பார்க்கெனப் பற்றிலாப் பரத்துறு முளத்தன்
பைந்தமிழ் நாட்டிற் பராவு சிவபரன்
செந்தமிழ் நூல்பல தெரிந்தநற் புலவன்
வடமொழிப் புலமையும் வாய்ந்த சீர்த்தியன்
மடமொழி வேட்கையர் வணங்குமெல் லடியினன்
அடைந்தவர் சிவாநந் தாநு பூதியை
அடைந்துயர்ந் தொளிர அருள்பெரு வண்மையன்
குருவுளிந் நாட்சிவக் கொழுந்தென விளங்கினும்
உருவுகொள் திருப்பெயர் உயர் மதுராபுரி
மீனுட்சி சுந்தர மெய்ஞ்ஞான தேசிகன்
கானுட்சி மலரடி கருத்திருத் தித் தொழ
அடியேன் போல்வார் அனைவர்க்கும் அருளிச்
செடிசே ருடலுயிர் செல்வமூன் றுங்கொடு
திருவைந் தெழுத்தும் சிவன்விழி மணியும்
திருநீ றுந் தருந் தெய்வ சிகாமணி
அத்தகு பரமா சாரியன் கருணையால்
இத்தமிழ்ப் புலமையும் இறையடிக் கன்பும்
உடையவர் சைவத் தொழுகிச் சிவனருள்
நடையொடு மலநடை நான்கும் தெரிந்து
பாச ஞானமும் பசுஞா னமும்சிவ
நேச ஞானமும் நெறியினில் விளங்கி
முன்னவை யொழிக்கவும் முடிவது செழிக்கவும்
பன்னகா பரணன் பதநிழல் வைகவும்
**இறை ஞானபோதம்** என்றோ ரருணூல்

முறையா றிரண்டு துறைநூற் பாவில்
பாடி யருளினன் பரம்பரை விளங்கிய
நாடிய திருவுளம் நம்பெருந் தவப்பயன்
அவ்வுயர் ஞான நூற் கரும்பொருள் விளங்கச்
செவ்வுரை கண்ட செந்தமிழ்ப் புலவன்
ஆரெனில் அவன்ருன் ஆரணி மாலையன்
சீரெழில் குன்ருத் திருவடிப் பூசனை
நாடொறும் முறைப்படி நாளினில் வழாதுசெய்
பீடொரு வாதுறும் பெருஞ்சிவ புண்ணியன்
தவத்துறை நெஞ்சொடு தவத்துறை வந்தவன்
பவத்துறை போகப் பகர்திருப் பெயராக்
குருநமசிவாயன் குமாரன் தரையெலாம்
பெருநலம் பெறத்தரும் பெருங்கொடையாளன்
தொல்காப் பியமுதல் பல்காப் பியங்களும்
ஒல்காத் திருவருள் உதவுமெய்ந் நூல்களும்
தருக்கம் முதற்புலம் பெருக்கும் பனுவலும்
எருக்கங் கண்ணியற் குருக்கந் தருந்திரு
முறைகளும் கற்றுத் துறைபோ கியவேள்
திருக்குறள் கூத்தன் திருக்கை யெழுத்தாய்
உருக்குமெய் வாசகம் உயர்சிவஞான
போதம் எனுமிவை புவியோர் அறியச்
சீதவா சகத்தால் தெளிவுரை யெழுதிய
பேரநு பவத்தாற் பேணும்இந் நூற்கும்
ஓரநு பவவுரை ஒழுங்குறச் செய்தனன்
அரிச்சி ராப்பகல் ஐவராட் டடக்கத்
திரிச் சிராப் பள்ளியிற் சென்னைச் சைவ
சித்தாந்த சமாசத் தின்ஞென்று மிகுமறு
பத்தாண்டு விழாவெளிப் படுஞ்சீர் நூலா
விழாக் குழு வினர்இதை வெளியிட நல்கினன்
கழாக் கொடு மலமறக் கடவுளின் நலமுற
ஞான தானம் நன்குதந் துவக்கும்
மான பூ டணன்குரு வரத ராசன்எனும்

நற்பெயர் உடையவன் நனிபல வூழி
பொற்பொடு வாழிய புதல்வர்கள் பௌத்திரர்
எண்பெருஞ் செல்வமும் எய்தி
நண்பொடும் இன்பொடும் நனிவா ழியவே.

—**ஞானப்பிரகாசம்.**

உ
சிவமயம்

# சீலஸ்ரீ மீநாக்ஷி சுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் அருளிச் செய்த

# இறை ஞான போதம்

## காப்பு

இன்பமெல் லாம்அருள்எழில் ஐங்கையனும்
மன்பதைக் குயிராம் மாது பாகனும்
நன்பத முருகனும் நல்குவர்
என்பனு வற்பொருள் இனிதுயிர் பெறவே.

## முதற் சூத்திரம்

பெண்ஆண் அலிமுதற் பிறங்கும் உலகம்
காரியம் ஆதலின் கருத்தன் உளனும்
அவன்உல களித்தழித் தாக்குவன்
அதனுன் முதலிறை அரனெனும் பிரானே.

## இரண்டாவது சூத்திரம்

அறிவுள தான்மா ஆணவ சத்தி
தடுத்தலின் அறியா சங்கரன் ஆணையாஞ்
சத்திதான் மாயையிற் றனுத்தரக்
கொண்டுதித் துழலுங் கோதுறு முயிரே.

## மூன்றாவது சூத்திரம்

இலதெனச் சொல்லலின் என்னுடல் என்றலின்
புலனைந் தொடுக்கம் புலப்படக் காண்டலின்
சுகமும் துக்கமும் சொப்பனத் துணர்தலின்
துயிலின் உணவும் தொழிலும் இன்மையின்
அறிவித் தால் தான் அறிதலின்
சகலமாம் உடலிற் றங்குயி ருளதே.

## நாலாவது சூத்திரம்

இச்சையும் ஞானமும் இயற்றலும் வளர்வுற
ஆன்மா மெய்பொய் அறியவும் ஐவே
றவத்தை அடையவும் அருளான்
மாயா கருவி மருவவைத் தனனே.

## ஐந்தாவது சூத்திரம்

பொறிகள் உயிராற் புலன்களை யுணரும்
தாமே அறியா சத்தன் உணர்த்த
ஆன்மா உணரும் அப்பொறி போல
விகாரம் அடையான் விமலன்
அயங்காந் தம்போல் ஆம்உயிர் அரனே.

## ஆறுவது சூத்திரம்

உணர்பொருள் எல்லாம் உதித்துநின் றழியும்
இல்பொருள் எல்லாம் என்றும் இலவே
அன்னவை முயற்கோ டாதிய வாகும்
ஆதலின் அரன்றன் அறிவே
உருவா யமைந்த உத்தமன் சத்தே.

## ஏழாவது சூத்திரம்

அரன்முன் நில்லா அறிவில் பொருளெலாம்
ஆதலின் அவற்றை அறியான் அவையும்
அரனை அறியா அவையலா வுயிரே
அவ்விரு திறனும் அறிவுள தாமே [படும்
அரன்றன் சத்தியால் அனைத்துமைந் தொழிற்
அருக்கன் ஒளியால் அலர்மரை முதலெனச்
சங்கற் பத்தாற் சகலமும் ஆமே.

## எட்டாவது சூத்திரம்

இருவினை யொப்பே இயைந்த வேளை
அருள்உயிர்க் கெய்தும் அப்பொழு திறைவன்
தானே குருவாய்த் தரைமேல் வந்தே
தவத்தினில் உணர்த்திச் சகலமும் நீக்கி
ஆட்கொள அவனே ஆம் உயிர்
ஆதலிற் குருவே அரனென உணரே.

## ஒன்பதாவது சூத்திரம்

பசுபாச ஞானம் பரமனைக் காட்டா
மறைந்த கண்கள் வளர்கதிர் காட்டா
கானல் நீர்போல் காண்பாய் உலகை
வித்தகன் ஞானம் விரும்பி
அன்பால் விதிமுறை ஐந்தெழுத் தோதே.

## பத்தாவது சூத்திரம்

நின்சிற் றறிவின் நீங்கி அரனல்
செயலெலாம் ஆதலும் சிந்தையுள் நின்றவன்
செய்துசெய்விக்கச் செய்தலும்
அறிவில் அறிசிவம் ஆவாய் திடமே.

## பதினொன்ருவது சூத்திரம்

ஆவிக் கனைத்தும் அரன்அறி விப்பன்
உயிர்க் குபகாரியென் ருேதுமெய்ந் நூல்கள்
பிறவிப் பெருங்கடல் பிழைக்கத் திருவடி
கருதுவா ரிதய கமலத்து விதிப்படி
பூசனை புரியப் புண்ணியம்
பெருகும் ஆதலிற் பெறுவர் இன் னருளே.

## பன்னிரண்டாது சூத்திரம்

முத்திபெற் ருேர்தம் மும்மல வாசனை
அகல அறிவினில் அரனைக் காண்க
சிவால யத்தையும் சிவவே டத்தையும்
ஆசா ரியனையும் அரனென த் தொழுக
அவனும் மறவான் அவனை மறவற்க
இறைஞானம் விளங்கி யினிது
பிறைவே ணியனடி பெற்றின் புறுகவே.

உ
சிவமயம்
சிவாக்கிர யோகிகள் திருவடி துணை

## முதற் சூத்திரப் பொருள்

பெண் ஆண் அலிமுதற் பிறங்கும் உலகம்
காரியம் ஆதலின் கருத்தன் உளனும்
அவன் உல களித்தழித் தாக்குவன்
அதனுன் முதலிறை அரனெனும் பிரானே.

இவ்வுலகம் (பிரபஞ்சம்) அறிவுடையது (சேதநம்) அறிவில்லாதது (அசேதநம்) என்று இருவகையது. அறிவு டையது சித்து. அறிவில்லாப் பொருள் அசித்து. சடப்பொருள். சித்பிரபஞ்சம் அசித் ப்ரபஞ்சம் என்பதும் வடமொழிச்சம்பிரதாயம். பெண் ஆண் அலி மூன்றும் சித்ப்ரபஞ்சம். 'அலிமுதல்' என்றதில் 'முதல்' என்றதால் அசித்பிரபஞ்சமும் கொள்ளப்பட்டது. வட மொழிச் சிவஞானபோத முதற் சூத்திரத்தில் ஆதிசப்தம் உள்ளதும் இப்பொருட்டே. தமிழ்ச் சிவஞான போதத்தில் அவன் அவள் அது என்று உள்ளதால், 'அது' என்னுஞ் சொற்பொருளாய் அஃறிணையுயிர்ப் பொருள் களும் உயிரில்லாப் பொருள்களும் அடங்குகின்றன. அதனுல் முதல் (ஆதி) என்னுஞ் சொல் வேண்டாத தாயிற்று. வடமொழி நபுஞ்சகலிங்கச்சொற் பொருளில் ஏனைஇரண் டிலிங்கப்பொருள் அடங்காமை அறிக.

பெண்ணுருவாயும் ஆணுருவாயும் பெண்ணும் ஆணும் அல்லாத அலியுருவாயும் உயிர்ப்பொருள் விளங்குகின்றது. உயிரில்லாப் பொருள்களும் வடிவுடன் இருக்கின்றன. இவற்றை உலகில் விளக்கமுறக் காண் கின்றோம். அதனுல், பெண் ஆண் அலி முதற் பிறங்கும்

உலகம் என்று சித்ப்ரபஞ்சத்தையும் அசித்ப்ரபஞ்சத்தையும் கூறினுர் ஆசிரியர். 'முதல்' என்று குறித்தவை அலியும் பேடியும் அல்லாத (அதேசநப்ரபஞ்சம்) அறிவில் பொருள்கள் எல்லாம் ஆகும். மண், நீர், தீ, காற்று, விண் முதலிய யாவும் அசித்ப்ரபஞ்சமே. இவை இவ்வாறு உலகில் விளங்குதலால், 'பிறங்கும் உலகம்' எனப்பட்டது. பிறங்கல்-விளங்கல், தொலேவிலிருந்தும் விளங்குதலால் மலேயைப் பிறங்கல் என்றதறிக.

நம்மாற் காணப்படும் உலகம் காரியப்ரபஞ்சம். காரிய ரூபத்திற் காணப்படுவன யாவும் அக்காரியத்துக்குரிய ஒரு கருத்தாவை உடையனவே. குடம் காரியம். அக் குடமான காரியம் தானே ஆகாது. குயவனுகிய கருத்தா இல்லேயேல் குடம் ஆகிய காரியம் நிகழாது. இப் பிரபஞ்சம் காரியம். எப்படி? ஆடை அவயவி, அதன்கண் உள்ள நூல்கள் தனித்தனியாகப் பிரிக்கப்படும் அவயவங்கள். அவைபோல உலகம் அவயவி, அதன்கண் பெண் ஆண் அலி முதலிய எல்லாம் தனித் தனியாகக் கொள்ளப்படும் அவயவங்கள். அவற்றுள், ஆண் பெண் அலி வடிவங்கள் அசேதனம். அவ்வடிவங் களில் நின்று அவற்றை இயக்குவன சேதனம். அச் சேதனம் காரியம் அல்ல. அசேதனங்களே இங்குக் காரியம் எனப்பட்டன. அவை அவயவப் பகுப்புடையவை, சடம், பலவாயுள்ளன என்று அறிகின்ருேம். அவற்றிற்கு உள்ள காரியம் எவை? படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்றும் அடைதலே காரியம். குடம் படைக்கப்படும், காக்கப்படும், அழிக்கப்படும். இக் குடத்திற்கு அம் முத்தொழிலேயும் செய்யும் கருத்தா ஒருவன் இல்லாமல் அக்காரியம் இதன்கண் நடக்குமோ? நடவாது. அதனுல், இக் காரியம் ஆகிய குடம் ஒரு கருத்தாவை உடையதுபோல, அப் பிரபஞ்சமும் ஒரு கருத்தாவை உடையது, இல்லேயேல், அதன்கண்

படைப்பு முதலிய காரியங்கள் நடவா. அவயவப் பகுப்புடையனவும் சடமும் பலவும் ஆகிய எல்லாம் தோன்றி நின்று அழியும். அத் தோற்றம் நிலை அழிவு ஆகிய முத்தொழிலையும் செய்யும் முதற் பொருள் இருத்தல் வேண்டும். இப்படி அறிவது **'அநுமானம்'** எனப்படும். 'உலகம் தோன்றி நின்றழியும், பெண் ஆண் அலி முதலாகப் பகுக்கப்படும் அவயவப் பகுப்புடையனவும் சடமும் பலவுமாயிருத்தலின், துணியைப்போல' என்று அநுமானம் செய்து பிரபஞ்சத்தின் காரியப்பாட்டை அறியலாம்.

காரியம் தானே நடவாது, கருத்தா இருக்க வேண்டும். செய்வோன் இன்றிச் செய்வினை இல்லை, காரியம் உள்ள பொருளில் இருப்பது. இல்லாப் பொருளில் காரியம் இராது. உள்ளதற்குச் செய்வோர் இன்றிச் செய்வினை இராது. உலகம் உள்ளது. அதில் இருக்கும் காரியம் ஒரு பொருளாற் செய்யப்படல் வேண்டும். இல்லையேல் உலகிற்கு அம் முத்தொழில் இல்லையாம். அத் தொழில்களைச் செய்யும் பொருளே கருத்தா. மண் முதலியவற்றில் உள்ளதாகிய குட முதலிய பொருளுக்குக் குயவன் முதலிய செய்வோரை இன்றி வனைதல் முதலிய செய்தொழில் நிகழாமைபோல, அப் பிரபஞ்ச காரியமும் செய்வோன் (கருத்தா) இன்றி (முத்தொழிற்பாடு, காரியம்) நிகழாது. அதனுல் 'காரியம் ஆதலின் கருத்தன் உளனும்' என்னும் அநுமானம் கூறப்பட்டது.

உலகம் செய்வோனை உடையது, உள்ளதாய்க் காரியப்படுதலின், யாது உள்ளதாய்க் காரியப்படுவது அது செய்வோனை உடையது, குடத்தைப்போல என்று அநுமானம் செய்தறிந்து கொள்க.

அக் கருத்தனே பிரபஞ்சத்தை ஆக்கலும் (படைப்பும்) காத்தலும் (காப்பும்) அழித்தலும்

(அழிப்பும்) உடையவன். அவனே அம் முத்தொழிற்கும் முதல்வன். வினைக்கு முதல் வினை முதல். வினை முதல் இல்லையேல் வினை இல்லை என்று முற்கூறப்பட்டது.

அதனால் "அவன் உலகு அளித்து அழித்து ஆக்குவன்" என்று முடிந்த முடிபாக அறிவிக்கலாயிற்று, ஆயினும், முதலில் 'அளித்து' என்று காத்தலைக் குறித்தது ஏன்? என்றால், பிரபஞ்சம் அநாதியாகலின் அம் முதற்கோடி நம் மனோரால் அறியப்படாது. அறியப்படுவது புனருற்பவமே. முதல்வன் மீளப் படைக்கும் உண்மையை உணர்த்த, 'அழித்து ஆக்குவன்' என்று குறித்ததால், அவ் வழிப்புக்கும் படைப்புக்கும் வேறாய் நடுவில் நிகழும் காப்பை முதலிற் கூறலாயிற்று.

அவ் வினைமுதற் பொருள் சொல்லிறந்து நின்ற தொன்மையதாயினும் ஏதேனும் ஒரு சொல்லாற் குறித்தே உணர்ந்து கொள்ளப்படும். அச்சொல் தலைமைபற்றி ஆண்பாற் சொல்லாக வைத்து 'அவன்' எனப்பட்டது. இச் சுட்டு வினைமுதல் ஒன்று உண்டு என்னும் (1) உலகறி சுட்டாகும். (2) பண்டறி சுட்டும் (3) பலர்புகழ் பொருட்சுட்டும் ஆகும். (3) இது (நிகழ்வு) பிரசித்தி குறித்த சுட்டு.

உலகுயிர்களை விட்டுப் பிரியாதவன்: உயிர்களுக்கு உலகை மீண்டும் படைக்கின்றவன் ஆதலின், 'பிரான்' என்றார். பிரியான் என்றதன் மரூஉமொழி 'பிரான்' என்பது. இது தமிழ்ச்சொல். தம்பிரான் — தம்மைப் பிரியான், தம்-உயிர்கள், தன்-கடவுள், 'தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்' என்றும் 'தன்னனந்தக் கொடி' (—சிவகாமவல்லி) என்றும் 'தான் தனியன்' என்றும் ஆண்டவாறறிக. 'இரண்டுமிலித் தனியனேன்' என்றது இரண்டற்கும் வேறாய தனிமை குறித்து நின்ற தன்மை யொருமையாதலின், அங்கே இவ்வாராய்ச்சி

யில்லை. [தன்+இ=தனி. தம்+இ=தமி. எம்+இ=எமி. "தமியனேன் தனிமை தீர்த்தே" தணிகைப் புராணம் *1949. 2562, 2717, 2831* பார்க்க. சங்ககால வழக்கு இது.]

காரியப் பிரபஞ்சத்தைக் காரணப் பிரபஞ்சமாக்கு வதே அழிப்பு. அதைச் செய்தலின் 'இறை' எனப்படும். [இறுத்தல்—இறை. பொறுத்தல்—பொறை. நிறுத்தல் —நிறை. சிறுத்தல்—சிறை. குறுத்தல்—குறை. அறுத்தல்—அறை. வறுத்தல்-வறை. துறுத்தல்-துறை. மறுத்தல்—மறை. எதிர் மறுத்தல், எதிர் மறை. கொடுத்தல்—கொடை, படுத்தல்—படை, வடுத்தல்—வடை எனப் பிறவினையிலும் புகுதல்—புகை, நகுதல்—நகை எனத் தன் வினையிலும் இன்னோரன்ன பலஉள]. பாசங்களை அரித்துப் பசுக்களைக் காத்தலால் **அரன்** என்றனர். "அஞ்ஞானத்தை அரிக்கின்றவன் ஆதலின் அரன் என்னும் யோக நாமத்தையுடையவன்" (சிவாக்கிரயோகிகள் உரை. சித்தி, சூ-*1*. முதல் திருவிருத்தம்) அஞ்ஞானம், பாசங்களால் வருவதே. பசுக்களுக்குப் பாசங்களை அரித்தலான் அரன் என்னுந் திருப்பெயருடைய முதல்வனை மன்னவனாகவும்.............ஆன்மாவை மன்னவ குமாரனாகவும்.............உருவகஞ் செய்தார்" என்னும் தமிழ்ச் சிவஞான மாபாடியத் துரையை நோக்குக.

'இறை' என்பது அரசனைக் குறிக்கும் வழக்கு நோக்கிச் சருவலோக சக்கிரவர்த்தியாகிய கடவுளையும் இறை என்றல் பொருந்தும். அதுகாப்பைக் குறித்ததே எனல் சாலாது. 'மாநிலங் காவலன்...தான் அதனு (அம் மாநிலத்து)க்கு இடையூறு தன்னால் தன் பரிசனத்தால் ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்

ஆன பயம் ஐந்தும் தீர்த்து அறங்காப்பான் அல்லனே' என்னும் நீதிப்படி செய்யுங்கடப்பாட்டில் இறுத்தற்கும் உரியன்.

இறை அரன் பிரான் எனுந் திருப் பெயர்களால் அவ் வினைமுதற்பொருளுக்குரிய எல்லா இலக்கணமும் எண்குணங்களும் குறிப்பாக உணர்த்தப்பட்டன; அப் பொருள் சித்தாந்த சைவத்துக்குரிய சிவபரஞ்சுடரே ஆதலை விரித்துணர்ந்து கொள்க என்று பணிப்பாராய், 'அதனுன் முதலிறை அரனெனும் பிரானே' என்று சித்தாந்தம் உணர்த்தினர் ஆசிரியர்.

இம் முதற்சூத்திரப் பொருளை விரிவஞ்சி இவ்வளவில் முடித்தாம்.

உ

சிவமயம்

## இரண்டாவது சூத்திரம்

அறிவுள தான்மா ஆணவ சத்தி
தடுத்தலின் அறியா சங்கரன் ஆணையாஞ்
சத்திதான் மாயையிற் றனுத் தரக்
கொண்டுதித் துழலுங் கோதுறு முயிரே.

இச் சூத்திரம் ஆன்மாக்களைக் குறித்த பொருளது, ஆன்மாக்கள் என்றும் நிலை பெற்றவை. அநாதியாக உள்ளவை. இச்சை ஞானம் கிரியை எனப்படும் மூன்றும் வடிவாக இருப்பவை. சிவனுக்குள்ள இச்சை முதலிய மூன்றும் தடுக்கப்பட்டவை. அவற்றைத் தடுப்பது எது? அதை ஆணவம் என்பர். மும்மலங்களுள் ஆணவம் முதலாவது. ஆன்மாக்களின் முற்றறிவைத் தடுத்தலால் ஆணவம் **பிரதிபந்தம்.** கன்மம் பிரவாகாநாதி யாகப் பற்றிக்கொண்டு புத்தியைப் போகத்திற் பிரவிர்த்திப் பிக்கின்றது. அச் செயலால் அக் கன்மம் ஆன்மாக்களுக்கு **அநுபந்தம்.** மாயை ஆன்மாக்களின் விபுத்துவத்தை மறைத்து ஏகதேச விருத்தியாகப் பண்ணுவதால், **சம்பந்தம்.** பிரதிபந்தமாகிய ஆணவமே முதல் மலம். அதற்கு அநேக சத்திகள் உள்ளன. தான் ஒன்றா யிருந்தும் அளவில்லாத உயிர்களை மறைக்கும் தன்மை யுடையது. மோகம் முதலிய ஏழு குணங்களையுடையது. மந்திர சத்தி நெருப்பை மறைக்காது. அதன் சூட்டைத் தடுக்கும். அதுபோல ஆணவசத்தி ஆன்மாவை மறைக் காது. அதன் இச்சை ஞானம் கிரியைகளைத் தடுத்து அவை நிகழ வொட்டாது.

மோகம் முதலிய ஏழு குணங்களாவன:—

1. மோகம், 2. மதம், 3. அராகம் 4. கவலே 5. தாபம் 6. வாட்டம் 7. விசித்திரம் எனப்படுவன. அவற்றுள் (1) மோகம் பூ, உடை, பூண் முதலியவற்றில் மயங்குவதற்கும் (2) மதம் உயிர் தன்ஞல் அடையப் படும் பொருள்களேப் புகழ்ந்து இதுபோல வேறு கிடைக் காது என மதித்தற்கும் (3) அராகம் தான் விரும்பிய பொருளில் மிக்க விருப்பத்தை உண்டாக்குவதற்கும், (4) கவலே அப்பொருள் தனக்குக் கிடைக்கவில்லேயே என வருந்துதற்கும் (5) தாபம் அப்பொருளேயே நினேத் துக்கொண்டு, கிடைக்காதாயின், நோதற்கும் (6) வாட்டம் தபித்து மூர்ச்சையுற்று மனமும் தேகமும் வாடுதற்கும் (7) விசித்திரம் தான் பெற்ற வாழ்வைப் பெரிதாக மதித்து நம்மை நிகர்வார் இல்லே என்று அகங்கரிப்பதற்கும் ஏதுவாகும்.

இச்சை ஞானம் கிரியை மூன்றும் உடைய ஆன் மாவை 'அறிவுளது ஆன்மா' என்று மட்டும் உள்ளதாகச் சொல்லியது ஏன்? அம் மூன்றனுள் எதைச் சொன் ஞலும் ஏனே இரண்டையும் கொள்ளலாகும். "ஒரு மொழி ஒழி தன் இனங்கொளற் குரித்தே" ஆயினும், "எத்திறம் ஞானம் உள்ளது அத்திறம் இச்சை செய்தி" என்பது சிவாகம வசனம். ஆணவம் அம் மூன்றையும் நிகழ வொட்டாமல் தடுத்தலின் ஆன்மாக்கள் அறிய மாட்டா. அவ்வான்மாக்கள் அத் தடையின் நீங்கித் தன்னேப்போலச் சிவ சொரூபமாயிருக்கவேண்டும் என்று திருவுளங் கொண்டு அவை எல்லாவற்றிற்கும் பக்குவம் தோற்றிச் சுகத்தைச் செய்தலால், **'சங்கரன்'** என்னுந் திருப்பெயர் அவனுக்கே உரியது. "சலம்இலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால் நலம் இலன் நாள்தொறும் நல்குவான் நலன்" என்றது நாவரசர் அருளிய மறை மொழி. ஆணே—ஆக்ஞா சக்தி.

அது சங்கரனின் நீக்கம் இன்றி நிற்கும் (அபின்ன) சக்தி. பரப்பிரமம் கிருபையால் தன் ஆக்ஞா சக்தியைக் கொண்டு திரிவித சொரூபமாய்ச் சடமாயிருக்கும் மாயையினின்று தேகத்தைக் கொடுக்கப்பெறும் உயிர், அந் நன்றியையும் அத் தலைவனையும் மறந்து, யான் எனது என்னும் அகந்தைக்கும் மமதைக்கும் உட்பட்டு, அவ் வபிமானத்தாலும் அகங்காரச் சேட்டைகளாலும் நல்வினை தீவினைகளைச் செய்கின்றது. அச்செயல் உயிர்க்குக் குற்றமாய் உள்ளது. அது தோன்றக் 'கோதுறும் உயிர்' எனக்குறிக்கப்பட்டது.

சிவபிரான் தன் கருணைப் பெருக்கால், குற்றம் உடைய உயிர்க்கு அக் குற்றமும் அதற்கு அடியான மலங்களும் தீர்த்தற் பொருட்டு, மாயாமல காரியமான தனுகரண புவன போகங்களைத் தருகின்றான். அவற்றை அவன் தன் சத்தி சங்கற்பத்தால் தருதலால், "ஆணை யாம் சத்திதான் மாயையின் தனுத்தர" என்றார்.

உயிர் எடுத்த தலைப்பிறப்பில் தலைவன் செய்த நன்றியை நினைந்துகொண்டிருக்கும் ஆயின், மறுபிறப்பு உண்டாவதற்கு வழியில்லை. தலைவனை மறந்ததும் அவன் நன்றியை மறந்ததுமாங் குற்றமிரண்டும் சுவர்க்கம் பூமி நரகம் என்னும் மேல்நடு கீழிடங்களுக்குப் போக்கு வரவு புரியச்செய்தன. இந் நன்றியை மறந்த தீங்குபொறுக்க மாட்டாத நம் ஆசாரியப் பெருமக்கள் எல்லாரும் தம்மை நன்றி மறவா நாயினுங் கடையாகக் கருதி வருந்தினர். தம்மை நாய்களாகக் கொண்டு அந் நாய்களை அடிமையாக உடைய கடவுளை நாயன் என்றும் நாயனார் என்றும் போற்றினர். ஐயன் ஐயாறனார் இரண்டும் போல இவையும் ஒருமையே. 'சிராப்பள்ளிமேவிய **நாயனார்** என நம்வினை நாசமே' என்றது பன்மையன்று. 'நாயன்' தமிழ்ச்சொல். 'நாயகன்' வடசொல்.

மெய்கண்டதேவர் "இருவினையின் போக்கு வரவு புரிய" என்றருளினர். அருணந்திதேவர் "இத் தரை கீழ் மேலும் அலமாரும்" "புலன்கடைப் பூழை நுழைந்தனன்; கலங்கி ஆங்கு ஐந்தவத்தையும் அடைந்தனன்; நீங்கிப் போக்குவரவு புரிந்தனன்; எவ்விடத்து (மு)ண்மையும் இவ்விடத்து ஆர்தலும் செல்லிடத்து எய்தலும்" ஊன் எடுத்து உழலும் ஊமர்" என்றருளினர் ஆகலின், அவற்றை உட்கொண்டு தனுத்தரக்கொண்டு உதிக்கும் என்றுஅமையாது உழலும் என்றார்.

இச் சூத்திரத்தில், ஆன்மாக்களுக்கு ஆணவம் மாயை இரண்டும் உண்மை வெளிப்படையாயும் கன்மம் உண்மை 'கோது' என்றதிற் குறிப்பாயும் கூறப்பட்டமை அறிக.

உ

சிவமயம்

## மூன்ருவது சூத்திரம்

இலதெனச் சொல்லலின் என்னுட லென்றலின்
புலனைந் தொடுக்கம் புலப்படக் காண்டலின்
சுகமும் துக்கமும் சொப்பனத் துணர்தலின்
துயிலின் உண்டியும் தொழிலும் இன்மையின்
அறிவித் தால்தான் அறிதலின்
சகலமா முடலிற் றங்குயி ருளதே.

உயிருண்டென்பது இச் சூத்திரம், ஆன்மா சூன்யம் என்றும், தேகம் என்றும், பொறிகள் என்றும், மனம் உட்கருவி என்றும், சூக்கும தேகம் என்றும், பிராணன் என்றும், பிரமம் என்றும், அனைத்தும் கூடிய சமுதாயம் என்றும், கூறும் எட்டுக் கொள்கையரையும் நோக்கி அவற்றின் வேருக ஆன்மா உண்டென்று சாதிப்பது.

ஆன்மா சூனியம் என்ருல் சூனியம் என்று சொன்ன ஆன்மா உண்டா இல்லையா? சொன்ன ஆன்மா சூனிய மாகாது. அதனுல் 'இலது எனச் சொல்லலின், (சொன்ன) உயிருளது' எனக் கூறப்பட்டது.

சூனியம் என்று சொன்ன ஆன்மா தேகத்தைக் காட்டிலும் வேறு இல்லை, அத் தேகமே ஆன்மா என்ருலோ அத் தேகம் எனது தேகம் என்று சொல் லுமோ? சொல்லாது. எனது தேகம் என்ருல் தேகம் உடைமை; எனது என்பது அதை உடையது. உடைமை யாகிய ஒன்றைத் தனக்கு உடைமை என்று அறிந்து என்னுடையது என்று சொல்ல அதற்கு ஞானம் இருக்க வேண்டும். தேகமோ ஞானமில்லாதது. அத் தேகத்தின்

வேருக அதில் ஒன்று உண்டு. அதுவே உடம்பில் தங்கும் உயிர் எனப்பட்டது. அவ்வுயிர் தனக்கு இடமாகிய உடலே 'என்னுடல் என்றலின்' அதனின் வேருய்உள்ளது. யான் உடம்பு யான் கை யான் கால் என்று வழங்குவ தில்லே. எனது உடல் எனது கை எனது கால் என்று வழங்கப்படுகிறது. இதனுலும் உடம்புக்கு வேருக உயிர் உண்டு என்பது விளங்கும்.

அவ்வுயிரை ஐம்பொறிகள் என்ருலோ அப் பொறிகள் ஐந்தும் புலன்களேத் தாமே கவரும் வல்லமை உடையன அல்ல. குருடன் கண், ஒளியைக் கவராது. செவிடன் செவி முதலியனவும் அப்படியே. பொறிகளின் ஆற்றல் (இந்திரிய சக்தி) குறையாத உடம்பிலும் உயிர் பொறிகளோடு கூடாதபோது ஒரு பொறியும் புலனேக் கவராது. கண்ணேத் திறந்துகொண்டு கருத்தை வேறிடத்தில் செலுத்திக்கொண் டிருப்பவன் கண் ணெதிரே நடக்கும் எவற்றையும் அறியான். அதனுல் அப் பொறிகளின் வேருய் உயிர் உள்ளது.

ஓசை (சப்தம்) ஊறு (பரிசம்) ஒளி (ரூபம்) சுவை (ரசம்) நாற்றம் (கந்தம்) என்னும் ஐந்தும் புலன்களாகும். அவற்றைக் கவரும் வழிகள் பொறிகளாகும். அப் பொறிகளேச் செவி மெய் கண் நாக்கு மூக்கு எனக் கூறுவர். அப்பொறிகளுள் ஒன்றறிந்த புலனே மற்ருென்று அறியாது. கண்ணறியும் ஒளியைக் காது அறியுமோ? அவ் வைந்தையும் கொண்டு ஐம்புலனேயும் அறிகின்ற ஒன்று அப் பொறிகளுக்கு வேருக உண்டு. அதுவே ஆன்மாவாம்.

சூக்கும தேகமே ஆன்மா என்ருலோ, அதுவும் ஆன்மா அன்று. சூத்திரத்தில் 'ஒடுக்கம்' என்றது ஐம் பொாிகளும் ஒடுங்கிய கனவை குறிக்கும்

*"ஓங்குணர்வி னுள்ளடங்கி யுள்ளத்து ளின்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்"

என்னும் ஆன்மா அருளின்பத்தில் ஒடுங்கும் ஒடுக்கத்தின் வேறு இது. ஐம்பொறிகளும் தொழிற்படாமல் உயிர்த் தொடர்பின்றி விலகுவது கீழாலவத்தையில் ஒடுக்கம் எனப்படும். *முன்னர்க் கூறியது சுத்தாவத்தையாகும். ஒடுக்கம் அறிதலாவது, ஒடுங்கும் தொழிலை அறிவது, ஒடுங்கும் கருவிகளை அறிவது, ஒடுக்கத்தில் நிகழ்வதை அறிவது, ஒடுக்கத்தில் நிகழ்ந்தவற்றை நனவில் மயங்கி அறிவது எனப் பலவகைப்படும். அவற்றுள் முடிவிற் கூறியதே இங்குக் கொள்ளப்படும். சூக்குமதேகமே நனவின்கண் அதை அறிந்தால், கண்டவாறு அறியாமல் மயங்கி அறிதல் ஏன்? ஆன்மாவோ ஒரு தன்மையதாய் இல்லாமல் உள்ளேயும் வெளியேயும் செல்லும் உரிமை யுடையது. அதனால் மயங்கி அறிதல் கூடும். அப்படி அறியும் ஆன்மா சூக்கும தேகத்துக்கு வேறாய் உண்டு. சூக்கும தேகத்தின் தொழிற்பாடு சொப்பனத்திலன்றி வேறு அவத்தைகளில் செல்லாது. அங்கே நிகழும் இன்பமும் துன்பமும் உயிருக்கன்றி அச் சூக்கும தேகத் துக்கு இல்லை. அதனாலும் அச் சூக்கும தேகத்துக்கு வேறாய் ஆன்மா உண்டு.

பிராணவாயுவே ஆன்மா என்றாலோ எனின், அதுவும் ஆன்மா அன்று. தூங்கி எழுந்தபின்னர் இனிது தூங்கி னேன் என்று அறிவது உண்டு. அதனால் தூக்கத்தில் இன்பநுகர்ச்சி உண்டு என்பது அனுபவம். விழித்த காலத்துப்போலத் தூங்கும்பொழுதும் பிராணவாயு இயங்குகின்றது. அதனால் அங்கு வினை உண்டு என்பதும் அனுபவம். இவ்விரண்டு அனுபவமும் ஒடுங்காதபோது உணரப்படும். ஒடுங்கியபோது உணரப்படாது. 'உண்டி' என்றது விடயங்களிடமாக வரும் இன்பத்துன்ப நுகர்ச்சி.

'தொழில்' என்றது உடம்பு தொழிற்படுதலே. அவ் வுடம்பு தூங்கும்போதும் விழிக்கும்போதும் மாறுபடாது ஒருதன்மைத் தாகும். ஆன்மா அவ்வாறின்றி வெவ் வேறு தன்மையை அடையும். அதனுல்தான் மயங்கி அறிந்தது. கருவிகள் ஒடுங்கினுலும் பிராணவாயு ஒடுங் காது இயங்கும். அதனுல் ஆன்மா முற்கூறிய அனு பவத்தை அடையும். அவ் வனுபவம் பிராணவாயுவுக்கு இல்லே. தூங்கும்போதும் பிராணவாயு இயங்குகிறது. அப்பொழுது பிராணவாயுவுக்குச் சுகதுக்க அனுபவம் இல்லே. இருந்தால் பிராணவாயுவே ஆன்மாவாகும். அவ்வாறு இன்மையால் அப் பிராணவாயுவின் வேருக ஆன்மா உண்டு என்பது சாதிக்கப்பட்டது.

அறிவித்தால்தான் அறிதலின் ஆன்மாவும் சித்து, பிரமமும் சித்து என்று இரண்டுகொள்வது ஏன்? முற்கூறிய சடமாகிய பலவற்றின் வேருய்ச் சித்தாகிய பிரமம் உண்டு. அதுவே ஆன்மா என்ருலோ எனின், அதுவும் ஆன்மா அன்று. ஆன்மா அறிவித்தா லன்றி அறியாது. கேவலாவத்தையில் செயற்படும் கருவி களுள் ஒன்றும் இன்றி அதீதமாய் நிற்குங்கால் ஆன்மா ஒன்றும் அறியுமாறு இல்லே. பின் கலே முதலிய கருவி களால் அறிவிக்க அறிகின்றது. இவற்ருல் அறியாமையும் அறிவதும் ஆன்மாவுக்கு உண்டு என்று தெரிகிறது. சித்தாகிய பிரமத்துக்கோ அவ்வாறு இல்லே. எக்காலத்தும் திரிபில்லாமல் அறிந்தாங்கு அறிந்து நிற்கும் சித்து அப் பிரமம். கேவலமும் சகலமும் ஆகிய அறியாமையையும் அறிவையும் மாறி மாறி அடையும் ஆன்மா அச் சித்தாகாது. மறந்து மறந்து அறியாமல் அறிந்த வண்ணமே மாறுபாடின்றி அறிந்து நிற்கும் பேரறிவுடைய பிரமம் அறிவித்தாலன்றி ஆன்மா அறியாது. ஆதலின் அப்பிரமத்துக்கு வேருய் ஆன்மா உண்டு.

எல்லாங் கூடிய சமுதாயமே ஆன்மா என்றுலோ எனின், அச் சமுதாயமும் ஆன்மா அன்று, ஏன் எனில், அவையெல்லாம் மாயையின் காரியங்களாய்ச் சடமாதலின் அழியும்தன்மையன. அம் மாயா காரியங்களால் யாக்கப்பட்ட உடம்பில் அவற்றுக்கு வேறாய் அவை போல் அழியாமல் நிலை பேறுடைய ஆன்மா உண்டு. அம்மாயா காரியங்கள் அனைத்தும் கூடிய சமுதாயத்துக்குப் பிண்டப் பெயராய்ச் சமுதாயம் சமூகம் என்று சொல்லப்பட்டாலும், அவை தாம் வெவ்வேறு பெயர் கொண்டிருத்தலால் அவற்றின் வேறாய் ஆன்மா உண்டு என்பதாம். மாயா காரிய தனு, ஸ்தாநமாகும். அதிலிருக்கும் ஆன்மா ஸ்தாநியாகும். ஸ்தாநத்துக்கு ஸ்தாநி வேறாய் இருப்பது என்றுமுள்ள உண்மை. இதையே சிவ ஞான போத வெண்பாவில் 'அது தனுவாம் (ஸ்)தானத்தின் வேறாகும்' என்றது.

உ
சிவமயம்

## நான்காவது சூத்திரம்

இச்சையும் ஞானமும் இயற்றலும் வளர்வுற
ஆன்மா மெய்பொய் அறியவும் ஐவே
றவத்தை யடையவும் அருளான்
மாயா கருவி மருவ வைத்தனனே.

இதன் விளக்கம்: பதியும் பசுவும் இச்சா ஞானக் கிரியை மூன்றும் உடையவை. அவற்றுள் பதியாகிய சிவம் மறைப்பற்ற இச்சா ஞானக் கிரியைகளையுடையது. ஆன்மாவிற்கு அம் மூன்றும் ஆணவத்தால் மறைக்கப் பட்டுள்ளன. அதனுல் பதி சுதந்தரமுடையதும் பசு சுந்தர மற்றதும் ஆகின்றன. ஆன்மாவின் மறைப்புற்ற இச்சா ஞானக் கிரியை மூன்றும் மறைப்பின் நீங்கி வளர்ந்து விளங்கும் பொருட்டு அப் பதி கருவி கரணங் களைக் கொடுத்தது. அவற்றைக்கொண்டு ஆன்மா மறைப்பாகிய கேவலத்தையும், கருவி காரணங்களை யடையும் சகலத்தையும், அவ் விரண்டுக்கும் வேருகிய சுத்தத்தையும் அடைகின்றது. அம் மூன்றிலும் சாக் கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் ஆகிய ஐந்தவத்தையும் அடையும். கருவி கரணங்களோடு கூடிய சகலாவத்தையில் உழன்றதால் உண்டான இளைப்பு நீங்கச் சாக்கிரம் முதலிய அவத்தைகளை அடைகிறது. இம் முறையில் அவத்தைகளை அடையவும் ஞானம் விளங்கவும் தன்னையும் தலைவனையும் அறியவும் கருவி கரணங்கள் இறைவன் 'மருவவைத்தனன்' என்று சூத்திரம் கூறு கின்றது. சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என மல நிலையால் மூவகைப்படும் உயிர்களுக்குத் தக்கவாறு மாயையிலிருந்து தனுகரண புவனபோகங்களை ஸ்தூல மும் சூக்குமமுமாகக் கொடுத்தருளுகின்ருன். அம்மாயை

அநாதியானது. சடமானது. இறைவனுக்குப் பரிக்கிரக சக்தியும் ஆகும். பரிக்கிரக சக்தியாவது சடரூபமாக வுள்ளது. இது தனுகரண புவன போகங்களாகிய சடரூப காரியங்களுக்கு முதற்காரணமாயுள்ளது. இதைப் பதி உயிர்க்குபகாரமாக்க வேண்டும்போது கொண்டும் மற்றைப்பொழுது தவிர்த்தும் வருதலால் பரிக்கிரகசக்தி என்பர். எப்போதும்விட்டு நீங்காதுள்ள சக்தி சித்ரூப மாதலின் அதிலிருந்து சடப்பொருள்களைத் தோற்றல் இயலாது. கலை முதலிய ஆறு அத்துவாக்களும் சடமும் காரியமுமாதலின் அவை தோன்றிய மாயையும் சடமும் காரணமுமாகும். ஆதலால் அக்காரண சட சக்தியைப் பரிக்கிரக சக்தி என்றனர்.

அம் மாயை மூன்று பிரிவாகக் கொள்ளப்படும். அவை சுத்தம் சுத்தாசுத்தம் அசுத்தம் என்பவை. சுத்த மாயையிலிருந்து நாதம் விந்து சாதாக்கியம் ஈசுரம் சுத்தவித்தையும், சுத்தாசுத்த மாயையினின்று மாயை காலம் நியதி கலை வித்தை அராகம் புருடனும், அசுத்த மாயையிலிருந்து சித்தம் புத்தி அகங்காரம் மனம் செவி மெய் கண் நா மூக்கு, வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம், சப்தப்பரிச ரூப ரசகந்தம், ஆகாசம் வாயுதேயு அப்பு பிருதிவியும் ஆகிய முப்பத்தாறு தத்துவங்களும் பிறவும் ஆன்மாக்களுக்குக் கருவி கரணங்களாக அமைந்து இச்சா ஞானக்கிரியைகளை வளர்த்து மெய்ப் பொருள் பொய்ப் பொருள்களை அறியத் துணையாய் அமைகின்றன. அதனுல்தான் 'அருளால் மாயா கருவி மன்னவைத்தனன்' எனக் கூறியது. இங்குக் காட்டிய அம் மாயையிலிருந்து ஈசானம் முதலிய பதினொன்று மந்திரங்களும், 81 பத மந்திரங்களும் 51 அக்ஷரங்களும், 224 புவனங்களும் முற் கூறிய 36 தத்துவங்களும் நிவிர்த்தி முதலிய ஐந்து கலைகளும் ஆகிய ஆறுஅத்வாக்களும் தோன்றும்.

சிந்திக்கும் சித்தமும், சங்கற்ப விகற்பங்களைச் செய்யும் மனமும், ஒருப்பட்டு எழும் அகங்காரமும், நிச்சயிக்கும் புத்தியும் ஆகிய நான்கும் அந்தக் கரணம் எனப் படும். அவை ஆன்மாவை நோக்கின் சித்தாவன அல்ல. அவற்றை நோக்கியும் தன்னை நோக்கியும் சித்தாயிருப் பது ஆத்மா. அவை அரசுபோன்ற ஆன்மாவுக்கு மந்திரி போல் உதவுதலின் மெய்கண்ட சுவாமிகள் அந்தக் கரணம் அமைச்சு என்று திருவுளம் பற்றினார்கள்.

உ

சிவமயம்

## ஐந்தாவது சூத்திரம்

பொறிகள் உயிராற் புலன்களை யுணரும்
தாமே அறியா சத்தன் உணர்த்த
ஆன்மா உணரும் அப்பொறி போல
விகாரம் அடையான் விமலன்
அயங்காந் தம்போல் ஆம்உயிர் அரனே.

*மறைப்பாற்றல் (திரோதான சத்தி) உயிர்களின் இச்சை ஞானக்கிரியைகளை மறைக்கும். அதனால், உயிர்களுக்குத் தாமே அறியும் ஆற்றல் இல்லை. அத் தடைப்பட்ட இச்சை ஞானக்கிரியைகளை உடைய உயிர் சிற்றறிவும் சிறு தொழிலும் உடையது. மலத் தடையாற் (பாசசம்பந்தத்தால்) பசு என்றாயிற்று. குருடு போல்வது உயிர். குருட்டுக்குக் கோல் உபகாரம் ஆதல் போல உயிர்க்கு உபகாரம் ஆக ஏதேனும் ஒன்று வேண்டும்.*

*ஐம் பொறிகள் உயிரின் உபகாரத்தால் புலன்களைக் கவர்கின்றன. கண்ணொளி புறத்துள்ள பொருள்களைக் கண்டு உருவத்தைக் கவர்கின்றது. உயிரறிவும் உள்ள (மன)மும் அக் கண்ணொளியொடு கூடிக்காட்டினால், அன்றிக் காணாது. உயிரறிவு காட்டுகின்றது. கண்ணொளி காண்கின்றது. காட்டக் காண்கின்றதாகச் கண்ணொளி அறியவல்லதோ? செவி நாக்கு மூக்கு மெய் என்னும் ஏனைப்பொறிகளும் இவ்வாறே அறியவல்லன அல்ல. கேட்பிக்கக் கேட்பதாகச் செவி அறியாது. சுவைப்பிக்கச் சுவைப்பதாக நாக்கு அறியாது. முகர்ப்பிக்க முகர்வதாக மூக்கு அறியாது. உறுவிக்க உற்றறிவ*

தாக மெய் அறியாது. தாமே அறிவனபோலத் தோன்றும். உண்மையில் தாமே (பொறிகள்) அறிய வல்லனவோ? வல்லன அல்ல. சடப்பொருள் சித்துப் பொருளின் உபகாரம் இல்லாமல் எத் தொழிலும் செய்யமாட்டாது. நஞ்சு ஒரு கிண்ணத்தில் இருக் கின்றது. அதைக் குடித்து மாய்த்துக்கொள்ள முயல் பவன், அக் கிண்ணத்தை யெடுத்து நஞ்சை உட்கொண் டால் அன்றி, அந்நஞ்சு தானே கிண்ணத்தொடு எழுந்து, வாயிற் புகுந்து, வயிற்றிற்சென்று, தனது கொல்லுந் தொழிலைச் செய்ய வல்லதோ? அதுபோலப் பாசம் பசுவை வல்லதொரு சித்துப்பொருள் சேர்க்கச்சேரும். தானேசேராது. பசு தடைப்பட்ட சித்துருவுடையது. ஆயினும் அது காட்டப் பொறிகள் காணும். அவை தாமே காணவல்லன அல்ல. இவ்வுண்மையே பொறிகள் (முதலியன) உயிராற் புலன்களை உணரும். அப் பொறிகள் தாமே அறியமாட்டா என்று இச் சூத் திரத்தின் முதற் பகுதி கூறிற்று.

அந் நிகழ்ச்சியை உபமானமாகவைத்து உயிரின் இயல்பை உபமேயமாக்கி உணர்த்துவது அடுத்த பகுதி.

எதையும் அநுபவிக்க உயிர்க்கு இச்சை உண்டு. ஆன்ம இச்சைக்குச் சுதந்திரம் உண்டோ? சிவனதிச்சை இச்சிக்கச் செய்தால் அன்றிச் சீவனது இச்சை நிகழாது. அவ்வாறே சீவனுடைய ஞானசக்தி கிரியா சக்திகளின் நிகழ்ச்சிகளுக்குச் சிவனுடைய ஞானக்ரியாசக்திகளின் பிரேரகம் அத்தியாவசியம் ஆகும்! இவ்வுண்மையைத் திருக்களிற்றுப்படியாரில்,

''சிவன்முதலே அன்றி முதல்இல்லை என்றும்
சிவனுடைய தென்னறிவ தென்றும்--சிவனவன
தென்செயல தாகின்ற தென்றும் இவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான்.'' என்று விளக்கி

யருளினர் உய்யவந்த தேவநாயனர். இதில் 'முதல்'

என்றது இச்சையை. "நாயகன் எல்லா ஞானத் தொழின் முதல் நண்ணல்" என்றும் 'நீக்கமில் அறிவா னந்த முதன்மை நித்திய முடைத்து' என்றும் "இறைவ ஞவான் ஞானம் எல்லாம் எல்லா முதன்மை அனுக்கிரகம் எல்லாம் இயல்புடையான்" என்றும் சிவஞான சித்தி யாரில் வரும் இடங்களில் வைத்து உணர்க.

கண்ணொளிக்குக் காட்சி விளக்கொளியை இன்றி அமையாது. காண்பன எல்லாம் விளக்கொளியின் செயலே. தான்என வேறு முனேக்கு மாறில்லாமல் அவ் விளக்கொளியிற் கண்ணொளி அடங்கி நிற்பின், விடயம் ஒன்றும் கண்ணுக்குத் தாக்குமாறில்லை. அதுபோல உயிரின் வைத்து உணர்வோம். உயிரின் இச்சை ஞானக்ரியைகளின் தொழிற்பாடு முதல்வனது இச்சா ஞானக்கிரியைகளின் தொழிற்பாடு இன்றிஅமையாது. உயிரின் இச்சை ஞானக்கிரியைகளின் தொழிற்பாடெல் லாம் சிவத்தின் இச்சை ஞானக்கிரியைகளின் செயலே எனக்கண்டு, அவ்விறைவன் வியாபகத்துக்குள்ளாக அடங்கி நிற்பின். பிரபஞ்சம் சிறிதும் தாக்குமாறில்லை. இது சிவஞானமாபாடிய வசனம். (சூ.10.அதி.2).

இறைவன் உயிர்களொடு கலந்தும் வேருயிருந்தும் (உயிர்களின்) இச்சை ஞானக்கிரியைகளை விளங்கச் செய்வன். சத்தன் உணர்த்த ஆன்மா உணரும் என்றது இதனையே. உயிர்கள் தாம் இறைவனுல் இச்சித்தும் அறிந்தும் செய்தும் வருதலை அறியமாட்டா. இதையும் 'அப்பொறிபோல' என்பதில் குறித்தார். இறைவன் அத்துவிதமாய் நின்று உணர்த்திஞல் அன்றி உயிர் உணராது. **காட்டும் உபகாரம்** என்பது இது. அத்து விதம் என்பது இருபொருள் கலந்து பிரிந்து தோன்ருது இயையும் ஒருமை ஆகும். அத்துவிதம் என்னுஞ் சொல்லின் பொருள் ஒருமை, வேறின்மை என்பன.

"சிற்பரமாந்தற்பரத்துள் அழுந்தி, நீங்குந் தீங்கு அகலத் தூங்கு. ஒருமை திரிந்ததாகில் சொற்பதமாம் ஞான நூல் ஓதல் ஆதி தொடங்கு." எனவரும் ஞானபூஜா விதியிலும், 'வேறின்மைகைகண்டார்' 'வேறின்மைகண்ட மெய்கண்டதேவ' என வரும் இருபா இருபஃதிலும், "வேறதின்மை,...யோகஞானம் இயற்றிடே" என்றும் "சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி" என்றும் வரும் சிவஞான சித்தியாரிலும் காண்க. 'அந்நிய நாத்தி' என்ற வட சொற்றொடர்க்கு :வேறில்லை என்றதே பொருள் ஆகும், அன்மைப் பொருள் மெய் கண்டதேவர் அருணந்திதேவர் முதலோர்க்கு உடன்பா டன்று. "அணைந்தாலும் ஒன்றாகாது. அநந்நியமா யிருக்கும்" "அன்னியம் இலாமையானும் அறிவினுள் நிற்றலானும்" என்னும் சித்திவசநமும் வேறின்மையைக் கூறியனவேயாதலறிக. "அன்னியமிலாமை — அன்னிய மிலான்" என்ற சிவஞானபோத வெண்பாவையும் உணர்க. மாதவச் சிவஞான யோகிகளும் "வேறன்மை" என்றுரைத்ததற்கு ஒவ்வாதவாறு "அம்முதல்வன் பாசக் கூட்டத்தின் நீங்கித் தனியாய் நின்ற என்னகத்துச் சோகம் பாவனையாற் புகுந்து வேற்றுமையின்றித் தோன்றலான் யானே யுலகெல்லாம் என்பேனுயினேன்" என்றுரைத்தருளினர்கள், (சி. போ. சூ. 2. அதி. 1 வெ. 4) "அறிவேயாதலும் வேறுதலும் உடனுதலு மாகிய முத்திறமும்தன்கண் தோன்றநின்றதோ ரத்துவித வியைபு" என்றதும் 'இருபொருளே அதுவதுவாய் ஒற்றுமைப்பட்டு ஒன்றுய் நிற்றற்கு ஏதுவாகிய தாதான் மியம் அத்துவிதம்" 'பிறிவரும் அத்துவிதம்' என்றனவும் ஈண்டுணரற்பாலன.

இந்நூலாசிரியர் மாவும் வெல்லமும் நெய்யும் பிரிப் பின்றிக் கலந்துநின்ற தன்மையை அத்துவிதக் கலப்பிற்கு

ஒப்புக் காட்டுவார். அவை ஒரு பொருள்போலத் தோன்றினும் ஒன்ருகா. ஏகம் என்று மயங்கலாமோ?

ஒளியுடைய கண்ணுயினும், கதிரோனொளியொடு கலந்தாலன்றிப் பொருள்களைக் காணவல்லதோ? உயிரின் ஆற்றலெல்லாம் அதுபோலும் என்று உணர்க.

ஆன்மாவின் இச்சைக்கு வரம்புண்டு எனினும் எதையும் அநுபவிக்க இச்சிப்பது ஆன்மாவுக்கு இயல்பு. இறைவனது இச்சாசத்தி ஆன்மாவின் இச்சாசத்தியிற் கலந்தால்தான் இச்சித்தவாறு அநுபவிக்கும். ஆன்மாவின் கிரியாசத்தி இறைவனது கிரியாசத்தியுடன் கலந்தால்தான் தொழில்களைச் செய்யும் வன்மையுறும். இறைவன் ஊட்டுவிக்கவேண்டும் என்ற இச்சையுடையவன் ஆய வழியே ஆன்மா எதையும் அநுபவிக்க இச்சிக்கும். அவனது கிரியாசத்தியால் ஆன்மக் கிரியாசத்தி தொழிற்படும், அவனது ஞானசத்தியால்தான் ஆன்மஞானசத்தி அறிதற்கியலும். அவ்வாறு அவனுடைய சத்தி மூன்றும் இயக்க ஆன்மசத்தி மூன்றும் இயங்கும் எளில் இறைவன் விகாரியாகானே எனலாம். விகாரியானல் எப்படிக் கருத்தனுவான்? இக் கேள்வி பொருந்தாது.

காந்தத்தின் முன் அணுகிய இரும்பு (பசாசம்) விகாரம் அடைகின்றது. அவ் விகாரம் காந்தத்திற்கு இல்லை. சூரியன் முன்னர்த் தாமரை மலரும். காந்தம் கனலைக் காற்றும். நீர் வற்றும். அம் மலர்ச்சியும் காற்றலும் வற்றலும் ஆகிய விகாரம் சூரியனுக்கு உண்டோ? இல்லையே.

காலதத்துவம் வியாபகமுடையது. உருவமில்லாதது. முக்காலத்திலும் பொருள்களுக்கு நடைபெறும் தோற்றம் இருப்பு அழிவு மூன்றும் அக் காலத்திற்கு உண்டோ? இல்லையே.

இதனை 'அயம் காந்தம்போல் ஆம் உயிர் அரனே' என்றதால் அறியவைத்தார்.

இறைவன் சருவ வல்லமையும் உடையவன். அவன் சந்நிதியில் தொழிற்படுவனவே விகாரம் அடையும்.

இறைவன் உயிர்கட்குத் தநுகரண புவன போகங் களையும் ஆறு அத்துவாக்களையும் தன் சந்நிதியில் மாயை யாகிய காரண முதற்பொருளின் நின்றும் தோற்றி நிறுத்தி மறைத்தும் ஒரு விகாரமும் அடையான்,

அவ்வாறுயினும் ஆன்மாக்கள் சிவ சந்நிதியில் அடையும் விகாரங்களைச் சிவன் அடையான் என்றும், அவன் அநாதியே பாசங்கள் இல்லாத இயல்பினன் என்றும் உணர்த்துவாராய் 'விகாரம் அடையான் விமலன்' என்றருளினர்.

உ

சிவமயம்

## ஆறுவது சூத்திரம்

உணர்பொருள் எல்லாம் உதித்துநின் றழியும்
இல்பொருள் எல்லாம் என்றும் இலவே
அன்னவை முயற்கோ டாதிய வாகும்
ஆதலின் அரன்றன் அறிவே
யுருவா யடைந்த உத்தமன் சத்தே.

இஃது இறைவனது சிறப்பியலை யுணர்த்துவது. இறைவனை உயிரெல்லாம் அறியும் என்று கொள்ள லாகாது. உயிர்களால் இறைவன் அறியப்படான் எனின், இறைவன் இல்பொருளே. உள்பொருள் ஆயின் ஏன் அறியப்படான்? எல்லாவுயிர்க்குந் தோன்றுமலிருப்பின் அன்றோ இல்பொருள் ஆவான்? காண்டற்குரிய பக்குவம் வாய்ந்த உயிர்களுக்குத் தோன்றுதலால் இல்பொருள் ஆகான். அவனது சிறப்பியல்புகளை அறிந்து கொள்ளும் முன்னர்ப் முப்பொருளியல்புகளையும் அறிந்து கொள்ளல் வேண்டும். உள்பொருள் இல்பொருள் (பாவம் அபாவம்) என்று பொருள் இருவகைப்படும். உள் பொருள்களுள்ளும் சத்து அசத்து சதசத்து என்று மூவகையுண்டு. சத்து எனப்படுவது பதிப் பொருள். அசத்து எனப்படுவன பாசங்கள். சதசத்து உயிர்கள். அவற்றுள் சத்தும் சதசத்தும் சித்து ஆயினும் பதியைச் சித்து என்றும் பசுவைச் சிதசித்து என்றும் பாசத்தை அசித்து என்றும் கூறுதல் மரபு. அவற்றுள். 'இது சத்து' என்று அசத்து அறியாது. சத்து அசத்தை அறிந்து அகல வேண்டா. 'அசத்து இது' 'சத்து இது' என்று அறிந்து, அசத்தின் நீங்கிச் சத்தைச் சார்ந்து பயன்

அடையத்தக்கது சதசத்தாகிய உயிரே. உவமை:— ஒளி இது என்று இருள் அறியாது. ஒளி இருளை அறிந்து அகலவேண்டா. இருள் இது ஒளி இது என்று அறிந்து இருளின் நீங்கி ஒளியைச் சார்ந்து பயன் அடையத் தக்கது அவ் விரண்டனையும் சாரும் இயல்பை யுடைய கண்ணே. இதனைச் சிவப்பிரகாசத் திருவிருத்தம் "சத்திது என்ற சத்துத் தான் அறியாத சத்தைக் சத் தறிந் தகல வேண்டா அசத்திது சத்திதென்றோர் சத்திரு ளொளியலாக்கண் தன்மைய தாம். அசத்தைச் சத் துடன் நின்று நீக்குந் தன்மையாற் சதசத்தாமே" என்று விளக்கிற்று. இதில் 'ஓர் சத்து' என்றது வினைத்தொகை. உணர்தல் என்றதன் மரூஉவே ஓர்தல். 'உணர்த்தல்' ஓர்த்தல் என மருவிற்று. ('ஓர்த்துள்ளம் உள்ளதுணரின்') சத்தையும் அசத்தையும் உணருஞ்சத்து உயிர்களாகிய சதசத்து. சிவன் சீவன் என்றிரண்டும் சித்து. சிவன் அருட் சித்து. இவன் (சீவன்) அருளைச் சேருஞ்சித்து. "சைதன்னியங்கள் ஐந்து (சிவதத்துவம்). சித்தசித்து (புருடதத்துவமாய் நின்ற ஆன்மா) ஒன்று. (ஏனைய தத்துவம்) முப்பதும் அசித்தே" [சித்தியார். சூ. 2. அதி. 3:- 69] 'தத்துவம் சத்தசத்துச் சதசத்து'.

இங்குக் கூறிய முத்திறப் பொருளுள் பதியைப் பாசங்கள் எட்டா. அப் பாசங்கள் பதிமுன் நில்லா. பசுக்களே பதியை அறியத் தகுவ. (சூ. 7) அப் பசுக்கள் தம் பொறி முதலியவற்றால் அறியப்படுவன பாசப் பொருள் களே. அவை காரிய ரூபத்தில் என்றும் நிலைப்பன அல்ல. காரிய ரூபத்தில் இருக்கும்போது பசு ஞானத் தால் அறியப்படுவன. அவை காரண ரூபமான மாயை யிலிருந்து தோன்றி நின்று ஒடுங்கும் தன்மையன. அத் தன்மையால் அவை அசத்து எனப்பட்டன. படவே 'உணர் பொருள் எல்லாம் உதித்து நின்றழியும்' என்றார் ஆசிரியர். உணர் பொருளை உள்பொருள் எனலாம்.

ஆயினும் உள்பொருள் சத்துமாகும். அசத்துமாகும். சைவ சித்தாந்தத்தில் பதி பசு பாசம் மூன்றும் என்றும் உள் பொருளே. மெய்கண்டதேவ நாயனுரும் 'உணர் உரு அசத்து' என்றே அருளினர். உள்பொருள் அசத்து என்றிலர். சிவஞான சித்தியாரிலும் 'அறிவுறும் பொருளோ ஈசன் அறிவுறுதவனே' என்றே வினுவிய தறிக. உள் பொருளோ இல் பொருளோ என்ருரல்லர். உள் பொருள் என்று முதற் சூத்திரத்தால் உணர்த்தப் பட்டது. ஆங்குத் தெரிந்துகொண்ட இறைவனது பொது வியல்பை ஈங்கும் உணர்த்தல் வேண்டா.

உணரப்படும் பொருள் அழியும் என்றதாலே ஒரு வாற்ருலும் உணரப்படாத பொருள் என்று கொள்ளல் தகாது. ஒருவாற்ருனும் உணரப்படாத பொருள் இல் பொருளே (சூனியமே). இப் பொருள் இருவகைத்து; பொய்ப் பொருள் அழிபொருள் என்று. "அழி பொருளும் பொய்ப்பொருளும் அளவிலவே" "மெய்ப் பொருளிற் பொய்ப்பொருளின் மேவாத அழி பொருளில் விருப்பம் அற்ருல் அப்பொழுதே உயிர் உண்டாம்" என்னும் சுவாமிநாத தேசிகர் அருளிய தசகாரியத்துள் வருவன காண்க. அவற்றுள் அழிபொருளேயே இங்கு அசத்து என்றும் அசித்து என்றும் முற்கூறினேம். சிவஞான போதத்திலே 'உணராது இன்மை' என்றும் சிவஞான சித்தியிலே 'அறியாதது இன்ரும்' என்றும் புடைநூலில் 'அறிவினுல் அறியொணுதேல் ஆவதொன்றின்மை' என்றும் கூறப்பட்டது இல்பொருளும் பொய்ப்பொருளும் சூனியமே. முயற்கோடு, யாமை மயிர்க்கம்பலம், மலடி மகன், ஆகாயத்தாமரை என்பவற்றை இல்பொருள் என்பர். அத் தொடர்ப்பொருள் இல்லையேனும் அவற்றின் சொற்பொருள் உள் பொருளே. முயலுண்டு, கொம்பு உண்டு, யாமையுண்டு மயிருண்டு, பிறவற்றின் மயிர்களாற் செயற்பட்ட கம்பலம் உண்டு. மலடி உண்டு,

வேருெருத்திக்குப் பிறந்த மகனுண்டு, ஆகாயம் உண்டு. தாமரை உண்டு. தாமரை உண்டு. அவை உள் பொருளே. பொய்ப் பொருள் (இப்பொருள்) அல்ல. அழி பொருளாகும். ஆயினும் அவற்றைக்கருதி முயற்கோடு முதலியனவாகச் சேர்த்துக் கூறிய தொடர்களுக்குப் பொருள் என்றும் இராது. அதனுல் "இல்பொருள் எல்லாம் என்றும் இலவே" என்று அறுதியிட்டுறுதியாக் கூறலாயிற்று. கூறியதால் இல்பொருள் என்றும் இல்லாதனவே என்று தெளியப்படும். படவே அத்தெளிவுற எடுத்துக் காட்டப்படுவன இவை என்பார் 'அன்னவை முயற்கோடு ஆதிய ஆகும்' என்ருர்.

பொய்ப் பொருளுக்கு எக் காலத்திலும் தோற்றம் இல்லே. மெய்ப் பொருளுக்கு எக் காலத்திலும் அழிவு இல்லே. பதி பசு பாசம் எனப்படும் முப் பொருளும் மெய்ப் பொருள். அவை என்றும் தோற்றமும் அழிவும் இல்லாதவை. பாசத்தின் காரியங்களுக்கும் பசு பாச சம்பந்தத்திற்கும் தோற்றமும் அழிவும் உண்டு. அவ் வழிவும் பாசகாரியங்கள் பாசமாகிய காரண ரூபத்தை அடைவது என்று முன்னர்க் கூறப்பட்டது. ஆறத்துவாக்களும் தநுகரண புவன போகங்களும் தமக்கு முதற் காரணமான மாயையில் ஒடுங்கு முறையில் ஒடுங்குவதே அழிவு என்று சைவ சித்தாந்த நூல்கள் கூறும்.

இறைவன் மாயாகாரிய சாதனங்களால் உணரப் படும் பொருளாவான் அல்லன். அவ்வகையுணர்வு பாச ஞானம். பசுக்களும் தமது ஞானத்தால் இறைவனே உணர மாட்டா. அப் பசு ஞானத்துக்கும் இறைவன் எட்டாதவன். இறைவன் பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன். பதார்த்தங்களேப் பார்க்கவரும் ஞானமெல்லாம் இறைவனேப் பார்க்க உதவா. இவை எல்லாங்கடந்த சிவ ஞானமே அவனுருவாகிய திருஞானம். அவ்வாறு சாலவுயர் சிவ ஞானத்தாலே அவனேக் காணலாமே அன்றிவேறு எதனுலும் எவராலும்

காண்டல் இயலாது. அவன் உருவம் (சிறப்பியல்பு) சிவ ஞானமே. அச் சிவ ஞானம் ஆகிய அருளே அவனைக் காண்டற் பொருட்டு நமக்குக் கண்ணாக விளங்குகின்றது. அவனருளே கண்ணாகக்காணின் அவன் நமக்குக் காட்சிப் படுவான். அவனருளாலே அவன் தாள் வணங்கும் முறைமையைக் குருபதேசத்தால் உணர்ந்து ஞானாப் பியாசத்தாற் சிவோகம் பாவனை பண்ணிச் சிவோகமாய் இருக்கும் முத்தர்க்கே எளியன் இறைவன். ஏனையோர் எவர்க்கும் எஞ் ஞானத்துக்கும் அவன் காண்டற்கு அரி யனே. இதனைப் "பாரார் விசும் புள்ளார் பாதாளத்தார் புறத்தார் ஆராலுங் காண்டற் கரியான் எமக்கெளிய பேராளன்" என்னுந் திருவாசகம் அறுதியிட்டுக் கூறிய உறுதியை உணர்க. அத்தகைய உத்தமச்சத்து அறிவே (சிவஞானமே) உருவாயமைந்த அரன் என்று முடி வுணர்த்தியது இச் சூத்திரம். இதனால் இறைவன் பொய்ப் பொருளும் அல்லன்; அழி பொருளும் அல்லன்; என்றும் உள் பொருளே யாவன்; ஆயினும் அசத்தாய் விடும் ஏனைய உணர் பொருளுருவுடையனுமல்லன்; என்றும் நின்று நிலவும் சிவஞானமே சொரூபம் (தன் னியல் பாயவுருவம்) ஆக உள்ளவன். அவனை அறிபவன் அவனது சொரூபமாகிய அருளினாலே அநநியமாகக் காண்பன். பாவனைக்கு எட்டாதவன் ஆதலின், அப் பரம் பரன் அருளினாலே பாவனை இறந்து நின்று பாவிக் கப்படுவன். படவே, அசித்தும் அசத்தும் ஆம் அறி பொருளுக்கும், அறியாததாய்ப் பொய்ப் பொருளும் அழி பொருளும் ஆம் அசத்துக்கும், அவற்றை அறியக் கூடிய பசு ஞானத்துக்கும், அஞ்ஞானத்தை யுருவாக உடைய பசுப் பொருளுக்கும் வேறாய்ச் சித்துச் சத்தாய் நிற்கும் சிவம், சிவஞான வியாப்திக்குள்ளே வியாப்யனாக நிற்றலாலும் அச் சிவஞான சொரூபத்தொடு அமலனான ஆன்மாவில் என்றும் நிற்றலாலும் அவன் இவன் என்ன நின்றுணரப்படுவனென்றதாம்,

உ
சிவமயம்

## ஏழாவது சூத்திரம்

அரன்முன் நில்லா அறிவில் பொருளெலாம்
ஆதலின் அவற்றை அறியான் அவையும்
அரனை அறியா அவையலா வுயிரே
அவ்விரு திறனும் அறிவுள தாமே
அரன்றன் சத்தியால் அனைத்தும்ஐந் தொழிற்படும்
அருக்கன் ஒளியால் அலர்மரை முதலெனச்
சங்கற் பத்தாற் சகலமும் ஆமே.

இதன் விளக்கம் ஆறுவது சூத்திரப் பொருளிற் பெரிதும் சொல்லப்பட்டதால் இங்குச் சுருக்கிக் கூறப் படும். உணருரு அசத்தாம் உணராதது இல் பொருளாம் இரண்டுமல்லாதது சிவமாகிய சத்தாம் என்று உணர்த்து மிடத்தில், பக்குவமுற்ற உயிர் சிவ ஞானத்தால் சிவனை உணர வல்லதாகும் அருளைப் பெறும் என்பது அங்குக் கூற நோந்தது. சிவஞானக் கண்கொண்டு ஆன்மாவால் உணரப்படுமவன் சிவன் என்னும் உண்மை அச்சூத்திரத் தாலும் சிவமாகிய சத்தையும் பிரபஞ்சமாகிய அசத் தையும் அறியும் பெற்றியது ஆன்மா என்பது இச் சூத் திரத்தாலும் உணர்த்தப்பட்டமையால், அதனொடு இதனிடை வேற்றுமை தெரியப்படும். அது சத்தை யுணர்த்தியது. இது சதசத்தை யுணர்த்தியது.

'சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது' என்பது சிவஞான போதத்தின் பொழிப்புரை வாக்கியம். சுட்டுணர்வு இன்றி நின்று ஆறியும் சிவசத்தின் முன் னர்ச் சுட்டியறியப்படும் அசத்தாகிய பிரபஞ்சம் விளங்கித் தோன்றுது என்பது அவ்வாக்கியார்த்தம்.

அரன் எதையும் சுட்டியறிந்தகல வேண்டா. பசு பாசங்கள் அவனுள் வியாப்பியம். அவற்றேடு வேற் றுமையின்றி உடனுய் நிற்றலையுடையவன் அரன். அவன் சுட்டியறியக் கிடப்பது யாதும் இல்லை. அதுவே 'அரன் முன் நில்லா அறிவு இல்(லாத) பொருளெல்லாம் எனப் பட்டது.

கதிரோன்முன் இருள் நில்லாது. அதுபோல அரன் முன் பிரஞ்சமாகிய அசத்து நில்லாது. சத்து அசத்து எனப் பொருள் இரண்டே என்பர் ஒரு சாரார். அவர்க்குச் சித்து அசித்து என்னும் இருபொருளன்றி மூன்ருவதொரு பொருள் உடன்பாடன்று. அவர் சிவாத்துவித :வாதி எனப்படுவர். அவர்க்கு ஆன் மாக்கள் சித்துருவாய்ச் சிவனுக்கு வேருயில்லை என்பதும் அது பொருந்துமாருகாமையும் சுருதிவிரோதம் ஆகும் என்பதும் கொள்கை. அக் கொள்கை பொருந்தாமை யுணர்த்த, அரன் தன்முன் நில்லாத அவற்றை அறியான் என்றும் சடமாகிய அவையும் அரனை அறியா என்றும் கூறினுர். அவ்வாறு கூறியதால் சிவசத்தால் அசத்தும், அசித்தாகிய அசத்தால் சித்தாகிய சிவமும் அறியப் படாமையால் ஒன்றற்கு ஒன்று பயனுகாமை தெளிவாம். ஆயின், அவற்ருல் பிறிதொன்று பயன் அடைதல் வேண்டும். அவ்வாறு ஒன்று இன்றேல் எனின், கதிரோனுல் இருளுக்கும் இருளால் கதிரோனுக்கும் பயனில்லை. அவ் விரண்டாலும் பயன் அடையும் கண், உண்டு. அது போலச் சித்துச் சத்தாகிய சிவத்தையும் அசித்தும் அசத்துமாகிய பிரபஞ்சத்தையும் சார்ந்து பயன் அநுபவிப்பது ஒன்று உண்டு. அதுவே சதசத் தாகிய ஆன்மா. இது பாரிசேடப் பிரமாணத்தாற் பெறுவது.

அவ் வான்மாவைத் தனித்து அறிதல் இயலாது. ஆன்மாச் சத்தையும் அறியும். அசத்தையும் அறியும். அது சத்தும் அன்று அசத்தும் அன்று. அவ் விரண்டன்

பாலும் நிற்கும் சதசத்தும் நித்தியப் பொருளும் ஆம். அசத்து ஆகிய ஆணவம் மாயை கன்மங்கள் எனப்படுங் குற்றங்கள் சத்தாகிய சிவத்தைப் பற்ற மாட்டா. சத தத்தாகிய உயிரையே பற்றுவன. ஆழம் நீளம் அகல மாகிய கடல் வெளியைப் பற்ருத உப்பு, அக்கடல் வெளி யிலிருக்கும் நீரைப் பற்றும். அது போலச் சத்தாகிய சிவத்தைச் சாராத அசத்தாகிய பாசம் சதசத்தாகிய உயிரைச் சாரும். அவை (சத்தும் அசத்தும்) அ(ல்)லா(த) உயிரே அவ்விரு திறனும் அறிவுளதாம் என்று சுருக்கிச் சொல்லியதில் இவ்வளவு பொருள்களும் விரித்துணரக் கிடக்கின்றன. சதசத்தாகிய ஆன்மாவுக்கு அச்சத்தாலும் அசத்தாலும் உண்டாகும் பயன் அனைத்தும் ஐந்தொழிற் படுதல் என்னும் ஒன்றில் அடக்கப்பட்டன. அத்தொழிற் பாடு ஐந்தாவது சூத்திரத் துரையில் அரன் அவிகாரியாதலை விளக்கற் பொருட்டு விரித்தெடுத்துக் கூறப்பட்டமையின் இங்குக் கூறப்படவில்லை. ஆண்டுக் கண்டுணர்க.

அரன் சத்தி சங்கற்பத்தால் பஞ்ச சிருத்தியமும் நடைபெறுவன ஆதலின், சாதனங்கொண்டு செய்யும் வழியுண்டாகும் விகாரம் அரனுக்குளதாகாது. அதனுற் சங்கற்பத்தாற் சகலமும் ஆம் என்ருர். 'அனைத்தும் ஐந்தொழிற்படும்' என்ருரேனும் ஈண்டுக் கொள்ளற் பாலது இது:— சத்து (அரன்) சுத்தமெஞ்ஞான மேனிச் சோதி. அசத்து (பாசம்) அசுத்த அஞ்ஞான மேனியந் தகாரம். சதசத்து (பசு) சுத்தம் அசுத்தம் மெய்ஞ் ஞானம் அஞ்ஞானம் ஆகிய இருமேனியும் சோதியும் அந்தகாரமும் அடையலாவது. மலரின் கண் மணம் போலச் சத்தின்கண் சத்தாயும் அசத்தின்கண் அசத்தாயும் அதுவதுவாய் நிற்கும் ஈரியல்பும் உரிமையாயுடையது. ஆன்மாவும் சிவமும் சித்தும் சத்தும் ஆம் என்னும் பொதுமையின் நீக்கி, அவ் விரண்டன் சிறப்பியல்பு உணர்த்தும் இடத்தில் அருணந்தி தேவ நாயனுர்,

'அறிவிக்க அறிதலானும் அழிவின்றி நிற்றலானும் குறி பெற்ற சித்தும் சத்தும் கூறுவது உயிருக்கு' என்ருர். இதில், உயிரின் தூல சித்தாந் தன்மையை அறிவிக்க அறிதல் என்றும் சத்தாந்தன்மையை அழிவின்றி நிற்றல் என்றும், அவ் விரண்டும் உயிர்க்கு இடுகுறியே அன்றி இயல்பாகா. ஏன்? அசித்தொடு சார்ந்து அசித் தாதலும் அசத்தொடு கூடி அசத்தாதலும் அடைதலின். உயிருக்குக் குறிபெற்ற சித்தும் சத்தும் கூறுவது என்ருர். சிவமாகிய சத்தோ "ஈசன் நெறி நித்தமுத்த சுத்தசித்து என நிற்பன் அன்றே" என அநாதியியல்பினன் ஆதலே யுணர்த்தினர். அச்சத்தால் சதசத்தாகிய ஆன்மா அடையும் பயன் (பாசவீடும் சிவப்பேறுமாகிய) இரண்டும் 'பிறிவிப்பன் மலங்கள் எல்லாம் பின் உயிர்க்கு அருளி ஞலே' என்று தெரித்தருளினர்.

உ
சிவமயம்

## எட்டாவது சூத்திரம்

இருவினை யொப்பே யியைந்த வேளை
அருள்உயிர்க் கெய்தும் அப்பொழு திறைவன்
தானே குருவாய்த் தரைமேல் வந்தே
தவத்தினில் உணர்த்திச் சகலமும் நீக்கி
ஆட்கொள அவனே ஆம்உயிர்
ஆதலிற் குருவே அரன்என உணரே.

இஃது ஏழாவது சூத்திரத்தில் உணர்த்திய ஆன்ம ரூபத்தை அடுத்து நின்ற ஆன்ம தரிசனமும் அதன் உடன் நிகழும் சிவரூபமும் உணர்த்திற்று. அசத்தால் விளங்கி அசத்தின்பால் உளதாய் அசத்தினை அறிந்து நின்ற வாற்றைத் தரிசிப்பது ஆன்மதரிசனம். சத்தால் விளங்கிச் சத்தின்பால் உளதாய்ச் சத்தினை அறிந்து நிற்குமாற்றைத் தரிசிப்பது சிவரூப தரிசனம். இவ் விரண்டும் ஒருங்கே நிகழா நிற்கும்.

ஆணவ மலம் தன் ஆற்றல் குறைந்து தேயுமாறு அதன் வழி நின்றது திரோதான சக்தி. அவ்வவ்வுயிர்களின் வினை பக்குவமாதற்குரிய சிவ புண்ணியங்களை ஏனை வினைகளொடும் கலந்து செய்து நுகரும்படி செய்யும். அச் சிவபுண்ணிய முதிர்ச்சியாலே மலபரிபாகம் ஆகும். அஃது ஆகுமளவு சத்திநி பாதம் உண்டாம். அவ்வளவுக்கு இருவினையொப்பு உண்டாகும். அப்போது திரோதாயி, அருட் (ஞான) சத்தியாக மாறும். அது மாறவே பிரபஞ்சமெல்லாம் சிவமயமாகும். அத்தகு ஞானசத்தியால்தான் உயிர்களுக்கு ஆணவமல மறைப்பு ஆகிய இருள் நீங்கும். இவ்வுண்மை 'இருவினை

யொப்பே இயைந்தவேளை அருள் உயிர்க்கு எய்தும்' என்று உணர்த்தப்பட்டது.

சிவ புண்ணிய மேலீட்டால் இருவினையொப்பும் மலபரி பாகமும் வந்தவிடத்து, சிவபெருமான் அருட்டிரு மேனிகொண்டு எழுந்தருளி "ஈசன் யோகக் கிரியா சரியை" ஆகிய 'இறப்பில் தவம்' செய்விக்கும். தனது அருளே திருமேனியாக ஞானகுருவாய்த் திருவுருக் கொண்டெழுந்தருள் செய்யும் இறைவன், அத் தவங் களைச் செய்து பக்குவ முதிர்ச்சியுற்ற உயிர்க்கு உண்மை ஞானத்தை உபதேசித் தாட்கொள்வன். இதனை அப் பொழுது இறைவன் தானே குருவாய் வந்து உணர்த்தி ஆட்கொள்வன் எனச் சுருக்கிக் கூறினர் ஆசிரியர். சகலமும் நீக்குதல்:—ஆணவ மல மாசு தீர்க்கும் பொருட்டு மந்திரம் முதலிய ஆறத்துவாக்களையும் அவற்றிடை அநுபவிக்கக் கடவனவாய்க் கிடந்த எல்லா வினைக்குற்றங்களையும் நீக்குதலாகிய தீக்ஷை செய்தல்.

'தவத்தினில்' என்ற தவம் சரியை கிரியை யோகம் எனப்படும் இறப்பில்லாச் சாதன மார்க்கம். 'உணர்த்த' என்ற உபதேசம் குருபதேசம். அக் குரு மெய்ஞ்ஞான குரு. உணர்த்தும் சிவஞானமும் உணர்த்த உணரும் ஆன்ம ஞானமும் கதிரோனொளியும் கண்ணொளியும் போலக் கலந்த சுத்தாத்துவிதம். சிவஞானம் உணர்த் தும் ஞான பேதங்கள்:—ஞான சத்தியின் தொழிற்பாடு மூவகைத்து.

(1) பெயர், சாதி, குணம், கர்மம், பொருள் என்னும் பகுப்புக் (விகற்பங்)களை யுணராமல் ஈதொன்று தோன்றா நின்றது என்று தொகையாக உணர்வது நிரு விகற்பக் காட்சியாம்.

(2) பொது வகையால் அவ் வண்ணம் கண்டவற்றை ஒன்றில் துணிவு தோன்ருமல், அதுவோ இதுவோ என்று ஐயுற உணர்வது இரட்டுறு காட்சியாம்.

(3) சிறப்பு வகையால் அப் பெயர் சாதி முதலிய ஐந்து விகற்பங்களையும் உணர்வது தெளிவு காட்சியாம். (சிவஞான போதமா பாடியம். சூ.9:10. அதி 1. பார்க்க) அம் மூவகையான ஞான சத்தியின் ருெழிற்பாட்டிஞலே, பதி பசு பாசம் எனப்படும் முப் பொருளையும் தனித் தனி மும் முறையாக ஒன்பது முறை ஆராய்ந்துணர்தலும் உணர்த்தலும் அச் சிவஞானம் ஆன்மாவிற்குத் தவத்தின் பயனுகக் குரு திருமேனியாக வந்து உணர்த்தும் ஞான பேதங்களாம்.

1. ஆன்ம சிற்சத்தி முப்பத்தாறு தத்துவங்களும் ஆன்மாவொடு கூடிய வழி நிகழுந் தொழிற்பாட்டையெல்லாம் தனித் தனி அத் தத்துவந்தொறும் இஃது இவ் வியல்புடையது எனத் தன்னின் வேருய் வைத்துணர்வது. (தத்துவரூபம்)

2. அச் சிற்சத்தி அத் தத்துவங்கள் ஏவுவான் இல்லாமல் யாதும் இயற்ற மாட்டாத சடப்பொருள் என்றுணர்வது. (தத்துவ தரிசனம்)

3 அச் சிற்சத்தி அத் தத்துவங்கள் பொருள் போலத் தோன்றி நின்று இடையே ஒடுங்கி (த் தன்னின் நீங்கி)த் தம் முதற் காரணமாகிய மாயையிலே தோன்றிய முறையே மறையும் உண்மையை உணர்வது. (தத்துவசுத்தி) இம் மூன்றும் பாசங்களைப் பற்றிய நிருவிகற்பக் காட்சி முதலிய மூவேறு காட்சியுணர்வு.

4. கேவலாவத்தை சகலாவத்தைகளிற் பொருந்தித் துய்த்துத் தத்துவங்களின் நீங்கிச் சுத்தியுற்ற ஆன் மாத் தன்னைக் கடவுளென (நாம் பிரமம் என) விரைவில் மதிப்பது ஆன்மரூபம்.

5. (அ) சுத்தாவத்தையை அடையும் வரையில், தன்னின் வேருகிய பாசத்திரளொடு அதுவதுவாய் அழுந்தி யிருந்த ஆன்மாவுக்கு உயிர்க்குயிராய் இருந்து உணர்த்தி வந்தது அருளே என்று உணர்த்தி அவ் வகம்பிரம ஞானத்தை நீக்க, அவ்வருளைப் போல நானும் சிவசமமே என்று முனைத்திடுவது ஆன்ம தரிசனம்.

(ஆ) அருளாலே ஆன்மாத் தன்னையே பிரமம் ஆகக் கருதிய நிலை மாறும்படி அந்த ஆன்மா உணர அருள் நிற்கும் ஞானநிலை சிவரூபமாகும். சிவ ரூபத்தான் ஆன்ம தரிசனம் ஆம். சிவ தரிசனத் தால் ஆன்மசுத்தி ஆம். ஆன்ம சுத்திப் பின் சிவப்பேறு ஆம் என்னும் உண்மை யுணர்வார்க்கு இங்குச் சிவ ரூபமும் ஆன்ம தரிசனமும் ஒருங்கு நிகழும் பெற்றி தெற்றெனப்புலப்படும். திரியக் காண்டலே ரூபம், இரட்டுறக் காண்டலே தரி சனம். தெளியக் காண்டலே சுத்தி (மாபாடியம் சூ.9.10. உரை பார்க்க).

6. (அ) அருளின் பண்புகளைத் தன் பண்புகளாகக் கொண்டு ஐந் தொழிலையும் புரியக் கருதிய ஆன்மா. அவ் வருள்தானே, பேரிரக்கத்தால் என் செயலை நின் செயலாகக் கொள்வது நன்று என்று (நன்றி மறத்தலைக் குறிப்பாகக் காட்டி) இழித் துணர்த்திய வழி. மீட்டும் அம் முனைப்பை விட்டுத் துவண்டு அடங்கி அவ் வருளிலேயே அழுந்தி விடுதல் ஆன்ம சுத்தி.

(ஆ) அவ்வண்ணம் துவண்டு அடங்கு மிடத்து. ஆன்மா உணர அருள் நிற்கும் நிலே சிவதரிசனம் ஆகும்.

(இ) ஆன்மா அருளின் மயமே ஆகித் தன் (சீவ) போத முழுதும் சிவ போதமாய் அடங்கி நிற்கும் நிலே யில் தான் உணர அருள் நிற்கும் நிலே சிவயோகம் ஆகும். இது ஞானமயம், ஆனந்தமயம் எனப் படுவது அடுத்துவருஞ் சிவபோகம் ஆம். இரண்டும் சர்வம் ஜகத் சிவமயம் எனப்படும். இது சர்வம் ஜகத் சக்திமயம் எனப்படும். பூரண சக்திமயம் வேறு அபூரண சக்திமயம் வேறு. அவ ரவர் மதக் கூற்றுலறியப்படும் அவ் விரண்டும்.

7. ஆன்மா சிவத்தொடும் ஒன்றுய்க் கூடியதால் நீரும் நீரும் கலந்தாற்போல ஒரே பொருளாயும்விடாது. பொருளின் தன்மை வேறுபடுதலால் இருளும் ஒளி யும்போல வேருயும்விடாது. வந்து சேர்தலும் வந்து சேராமையும் இன்றி, அநாதிகேவலத்தில் ஆணவத்தொடு அத்துவிதம் ஆனவாறு முத்தி காலத்திலும் ஞானமே மயமாய் அச் சிவஞானத்துக் குள்ளே அழுந்தி, அழுந்துமதனுலே ஆண்டு ஆன்ம போதமாகிய சுட்டுணர்வு நீங்கப் பெற்றும் சிவ ஞானத்தாலே சிவத்தை உணரும் உண்மையுணர்வு நிலேபெற்றும், அவ்வுண்மையுணர்வும் அச்சிவத்தின் வசமேயாய்ப் பேரின்பத்தைத் தன் அநுபவமாகவே அநுபவிப்பது **சிவபோகம்** (ஆன்மலாபம்). ஓங்குணர்வி னுள் அடக்கம் ஞானமயமாகிய சிவயோகம். உள்ளத் துள் இன்பொடுங்குந் தூக்கம் ஆநந்தமயம் ஆகிய சிவபோகம். வகாரம் ஞானமயம். சிகாரம் ஆநந்த மயம் என்று சங்கேதமாதலின், அவ்விரண்டும் ஒருங்கே **'சிவமயம்'** எனப்படும். இதுவரையிற் கூறியவற்றையெல்லாம் அரதநச் சுருக்கமாக "ஆட்

கொள அவனே ஆம் உயிர்'' என்றருளினர் ஆசிரியர். மெய்கண்டதேவ நாயனர் ''அன்னியமின்மையின் அரன்கழல் செலுமே'' என்று திருவுளம்பற்றியருளி னர். அதில் 'தம் முதல்' என்றதும், இதில் 'இறை வன்' என்றதும் ஒன்றே. 'விட்டு' என்றதன் விளக்கமே 'சகலமும் நீக்கி' என்பது. சிவஞான போதமும் இறைஞான போதமும் எல்லாத் திறத் திலும் ஒன்றே யாதலே யாண்டும் அறியலாம். பொருள் வைப்பு முறைமையிற் சிறிது வேறுபடுதற் காரணம் அறிஞர்க்குப் புலப்படும். இரண்ட னுள்ளும் இச் சூத்திரப் பொருளே முடிந்த முடி பாகும். ஒன்பதாவது முதலிய சூத்திரப் பொரு வெல்லாம் இதனை விரித்துணர்த்துவனவே. அவ் வுன்மையைச் சிவஞான சித்தியாரில் இச் சூத் திரத்தின் முடிவில், அரனடியை யுணரும் போது அகன்றும் உணராது மறந்தபோது அணுகியும் உயிர்க்கு ஆசு படுத்தும் மல மாயை கன்ம மாகிய நீங்கலரும் பாசம் அறுக்கும் வகையை அருளின் வழி (ஞானநெறி) உரைப் பாம் என்றருளியது காண்க. சோமசம்பு பத்ததி சைவ சந்நியாச பத்ததிகளில் தீக்ஷாக்ரமங்கள் (அருளின் வழி) விளக்கப்பட் டுள்ளன. இறைவனடி யடைவிக்கும் எழில் ஞான பூஜையையும் ஞான நிட்டை மேவுதலையும் வீட்டை யடைதலையும் சிவஞானச் செயலுடையோராகிய சீவன் முத்தர் சிவன் தோற்றம் ஒன்றுமே காண்ட லையும் முறையே பின் நான்கு சூத்திரங்களின் பொருள் விளக்கமாகும். 'அரன் கழல் செலும்' 'மலரடிக் கீழ் வைப்பன்' 'அரன் மலரடிக் கீழ் வைப்பன்' என்றவை முத்தி முடிவு. 'குருவே சிவம்' என்னுமிடம் நூன் முடிவு.

உ
சிவமயம்

## ஒன்பதாவது சூத்திரம்

பசுபாச ஞானம் பரமனைக் காட்டா
மறைந்த கண்கள் வளர்கதிர் காட்டா
கானல் நீர்போல் காண்பாய் உலகை
வித்தகன் ஞானம் வீரும்பி
அன்பால் விதிமுறை ஐந்தெழுத் தோதே.

இது முதலிய நான்கு சூத்திரங்களின் பொருளும் முற் சூத்திரப் பொருளின் விரித்துரையே ஆம். (1) தள்ளத் தக்கதைத்தள்ளி அதனுல் வருந்துன்பத்தின் நீங்குவதும் (2) கொள்ளத்தக்கதைக் கொண்டு அதனுல் வரும் இன்பத்தின் ஓங்குவதும் வீடுபேறும். (1 வீடு. 2 பேறு). அவ் வீடு பேறு அடைதற்குரிய இயல்பு உயிர்க்கு உண்டு என்று ஏழாவது சூத்திரம் உணர்த்திற்று. அவ்வீடு பேற்றை விளைத்தற்கண் சிறந்த சாதனம் ஞானம் ஒன்றே. அவ்வீட்டுக் குரிய பகைப்பொருள் இது பேற்றுக் குரிய நட்புப் பொருள் இது எனப் பகுத்தறியும் ஞானம் ஆகிய அதனைக் குருவருளால் தான் எய்தலாம். பாசப் பற்று அற்றுல் தான் அவ்வுண்மை ஞானம் நிகழும். பாச ஞானத்தால் அது கிடைப்பதன்று. எட்டாவது சூத்திரப் பொருள் இது. பாச ஞானம் எகதேச ஞானம். அஞ்ஞானத்தால் வியாபகப் பொருளை அறியும் விவேக ஞானம் நிகழாது. பசுஞானம் வியாபகஞானம். அதனுல் பதியாகிய வியாபகப் பொருளை அறியத் தடை என்னை என்று கடாவலாம், அக் கடாவிற்கு விடை கூறும் முகத்தால் ஆன்மசுத்தி செய்யும் முறைமை உணர்த்தியது இச் சூத்திரம். இன்னம் சிறிது தெளி

வுறுத்துவோம். சாதித்தற்குரிய அதிகாரியை ஏழிலும் அவ்வதிகாரி சாதித்ததாற் பெறப்படும் பயன் இது அதற்குச் சிறந்த சாதனம் இது அச் சாதனம் வருவாய் இது என்று எட்டிலும் உணர்த்தி, இதில் அச் சாதகத்தை நிகழ்விப்பது இது அதனைப் பெறுமாறும் அது நிலை பெறுமாறும் ஆகிய சாதிக்கும் உபாயம் இது என்றுணர்த்தினர்.

சிவஞான போதத்திலே 'ஊனக்கண்' என்றதைப் பசுஞானம் என்றும், 'பாசம்' என்றதைப் பாசஞானம் என்றும் விளக்கி 'உணராப்பதி' என்று பதிமேல் நின்ற வாற்றைப் பரமனைக் காட்டா என்று மாற்றி அவ் விரு ஞானத்தின் மாட்டாமையையும் வெளிப்படுதியது இது.

பசு ஞானமும் பாச ஞானமும் பரமனைக் காட்டா என்றதால், பாரிசேடப் பிரமாணத்தாற் பெறப்படும் பதி ஞானம் ஒன்றே பரமனைக் காட்டும் என்பதுறுதியாம். அப் பதிஞானமே 'வித்தகன் ஞானம்' என்று இதிற் கூறப்பட்டது. அப் பசு பாச ஞானம் இரண்டும் பதி தரிசனத்திற்கு உதவாக் குருட்டுக் கண்கள் என்பார் 'மறைந்த கண்கள் வளர்கதிர் காட்டா' என்றார். முதனூலைப் போற்றிக் 'கானல் நீர்போல் காண்பாய் உலகை' என்றார். பாசக் கோடை வெப்பம் தணியவும் தவிரவும் செய்வது பதியின் திருவடி ஞானமே என்பார். தண்ணிழலாம் பதி என்னும் முதனூற் பொருளை யுட்கொண்டு 'வித்தகன் ஞானம் விரும்பி' என்றார். 'விதி' என்றது முன்னூல். 'மாறி விதிப்படி ஓது அஞ்செழுத்துமே' என்றும் 'எண்ணி அஞ்செழுத்தும்மாறி' என்றும் *மேலா சி மீளா விடின்' என்றும் பின்னூல் பன்னின. 'மேல்' என்றதை இடமுன்னாகக் கொண்டு முடிவான முத்தி பஞ்சாக்கரத்தைக் குறிக்கும்பொருளுமுணர்த்திற் றென்னலாம். 'அன்பால்' என்றதில் உள்ள (2) அன்பு

(3) அரன்கழ சேறற்குக் காரணமானது என்ருர் சிவ ஞான மாபாடியத்துள். அதற்குக் காரணம் (1) அயராமை. இம் மூன்றும் (1) அறிவு (2) விழைவு (3) செயல்களின் நிகழ்ச்சி. இது ஞானம் பெற்றதன் பின்னர் வளரும் அன்பு. முன்னர் நிகழும் அன்பு (பத்தி) ஞானத்துக்கு ஏதுவானது. ஆதலின் 'அன்பால் விதி முறை ஐந்தெழுத்து ஓது' என்ருர். இது வாசனுமலம் அறுக்கும் சாதனம்.

பக்தி அந்தரங்க பக்தி பாஹ்ய பக்தி என இரு வகை. அப்பக்திக்கு இவ்வைந்தெழுத்து முயரிய சாதனம். அந்தரங்க பத்தியை முன்னூலும் இந் நூலும் ஆகிய ஞான போதம் இரண்டுமே ஒன்பதாவது சூத்திரப் பொருளில் அடக்கிக் கூறின. "அந்தரியாகந்தன்னே முத்திசாதனமா அறைந்திடுவர் அது தானும் ஆன்ம சுத்தியாகும்" என்றது சிவஞான சித்தி. அவ் வக வழி பாட்டை எங்கள் குருநாதராகிய சிவாக்கிர யோகிகள் அருளிய சிவநெறிப் பிரகாசத் திரு விருத்தம் உணர்த்து மாறு இது:—

"இருவகைத்தாம் பக்திஆந் தரங்கம் என்றும்
இயற்றியிடும் புறம்பென்றும். இவற்றில்அந் தரங்கம்
வருமுறைதான் இதயகம லத்துறையுஞ் சிவத்தை
மாசில்பளிங் கொளியுருவம் இலிங்கமாய் மதித்தே
குருபதமாம் அலர்மதிமண் டலத்தமுதி னலே
குறைவில் அபிடேகம்செய் துபசாரம் அனேத்தும்
ஒருமைதிகழ் மனத்துடனே புரிந்துசதி பதிபோல்
உடன்பிரியா திருக்கையென்றே உரைத்திடும் ஆகமமே"

பாஹ்யபத்தி பன்னிரண்டாவது சூத்திரப் பொருளா யிற்று. ஐந்தெழுத்து விளக்கம்:—

பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனேப் பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே

நாடுதல் அதிரகசியப் பொருளாதலின், இச் சூத்திரத்தில் அதனை முன் வெளிப்படக் கூறுமற் பெறவைத்தார். பின் வித்தகன் என்று வெளிப்படக் கூறப்பட்டது. முன் பாரி சேடப் பிரமாணத்தாற் பெற்ற அப்பதி ஞானத்தால் நேச மொடும் உள்ளத்தே நாடும் அந்தரங்க பக்திக்குச் சிறந்த சாதனம் ஆகிய திருவைந்தெழுத்தை விதிப்படி மாறி அறிவாற் கணித்தல் வேண்டும். அப் பஞ்சாக் கரத்தின் இயல்பெல்லாம் உண்மை விளக்கம், சிவப்பிர காசம், திருவருட்பயன், கொடிப்பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றில் விரித்தோதப்பட்டன. அவற்றை ஆண்டுக் காண்க. இதயத்திற் பூஜையும் நாபியில் ஹோமமும், புருவநடுவில் தியாநமும் செய்யற்பாலன. வெளியில் ஞானபூஜை செய்யும் முறைப்படி, உள்ளத் தாமரையில், இறைமையை அவ்வஞ் செழுத்தால் அமைந்த திருமேனியில், கொல்லாமை, ஐம்பொறி யடக்கம், பொறுமை, இரக்கம், அறிவு, வாய்மை, நோன்புஎன்னும் எட்டுப் பூக்களால் அவ்வஞ் செழுத்தாற் பூசை செய்து குண்டலி ஸ்தாநமான நாபியில் ஞானக்கினியை எழுப்பி, அதில் அத் திருவைந் தெழுத்தாலே விந்து ஸ்தாநத்து அமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனை நாடி இடை நாடி ஆகிய சுருக்கும் சுருவமும் கொண்டு ஹோமம்பண்ணி, விந்து ஸ்தானமாகிய புருவ நடுவில், தத்பதப் பொருள் (சி)த்வம் பதப் பொருள்(ய) அசிபதப் பொருள்(வ)ஆகும் முறைமையில் அவ்வஞ் செழுத்தாற் சிவோஹம் பாவனை செய்யின், அப்பொழுதே அங்கு அவ்வண்ணம் அறிவுக்கு அறிவாய் விளங்கித் தோன்றும் ஆண்டானுக்கு அடிமை யாம். ஞாதுரு(ய) ஞானம்(வ) ஞேயம்(சி), சுட்டறிவு இறந்து ஞானத்தால் ஞேயத்தைக் கண்டு, எங்கும் தானாக நிட்டை கூடிய வழியும் தொன்று தொட்டுவரும் ஏகதேசப் பழக்கம் பற்றிப் புறத்தே விஷயங்களின் சென்று பற்றும் தன் அறிவை அவ்வாறு செல்ல வொட்டாமல் மடக்கி, அகத்திலே ஒரு குறியில் நிறுத்தி

நிட்டை கூடி நிற்கும் முறைமையை அஞ்செழுத்து ஓதும் முறைமையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்கச் சிவ தரிசனத்தை விளக்கி, வாசனை வயத்தாற் புறத்திற் சென்று ஏகதேச அறிவைப் பற்றறத் துடைத்துப் பூரண நிலையிற் கொண்டு செல்லும் ஆகலான், அது வாசனுமலம் போக்கற்குரிய சிறந்த சாதனம் ஆகும். சிவோஹம் என்பது நிற்கும் முறை. 'சிவாய' என்பது ஓதும் முறை, இங்கு ஓதும் முறைக்குரிய அஞ்செழுத்துள் சிகாரவகாரம் இரண்டும் அல்லாததே அஹம் என்னும் சொல்லின் பொருள் ஆதலின், இருவேறு முறையும் பொருளான் ஒன்றுதலறிக. தமிழ் மாபாடியத்தில், 'கண்டதை யன்றன்றென விட்டு' என்னுந் தொடக்கத்துச் சிவஞான போத வெண்பாவுரைக்கண் உணர்த்திய சிவோகம் பாவனை விளக்கத்தையும் ஈண்டுக் காண்க.

தொல்காப்பியப் பொருளதிகாரக் கற்பியலுரைக் கண் சூ. 188.(47) ஆசிரியர் நச்சினர்க்கினியர் 'வேண்டிய கல்வி யாண்டு மூன்றிறவாது' என்றதற்கு யாண்டு இறவாது மூன்று இறவாது என்று சொல்வகை காட்டி, மூன்று பதத்தைக் கடவாது என்று பொருள் சொல்லி, மூன்று பதமாவன 'அது' என்றும், 'நீ' என்றும், 'ஆனுய்' என்றும் கூறும் பதங்களாம் என்றுரைத்தருளினர். அதனெடு சிவஞான மாபாடியத்துள் "சிகார யகார வகாரங்கள் முறையே தற்பதப் பொருளும் துவம் பதப் பொருளும் அசிபதப் பொருளும் ஆம்" என்றுரைத்தருளி யதை ஒருங்குவைத்துணர்வார்க்கு ஒரு சிறந்த உண்மை முடிபு விளங்கும். இதுவே இச் சூத்திரப் பொருட்பயன்.

உ
சிவமயம்

## பத்தாவது சூத்திரம்

நின்சிற் றறிவின் நீங்கி அர னுல்
செயலெலாம் ஆதலும் சிந்தையுள் நின்றவன்
செய்து செய் விக்கச் செய்தலும்
அறிவில் அறிசிவம் ஆவாய் திடமே.

இச் சூத்திரமும் மேலது போல முன்னிலையாக்கி மாணுக்கனுக்கு உபதேசித்த தாகும். இதன் உட்கருத்து **"அவன் இவனுய்"** நின்ற முறை ஏகன் ஆகி அரன் பணியில் நின்றிடல்" ஆகும். அதாவது **சிவயோகம்** உணர்த்துவதென்று அறிக. அச் சிவயோகத்தின் பயன், வீடுபேறு எனும் முத்தியின் ஒரு பாதியாய பாச வீடு. மறு பாதியாகிய சிவப்பேறு அடுத்த சூத்திரத்தா லுணர்த்தப்படும். மேல் அவன் என்றது சிவனை. இவன் என்றது ஆன்மாவை, பிரசித்தமாதலின் இவன் என்ருர். அருணந்திதேவ நாயனுர். அவன் என்றது தற்பதப் பொருள். சிவாக்கிரயோகிகள் முற்சூத்திரத்தில் ஞான நெறி கூறி, இதிற் பிரபத்தி நெறி கூறினுர் என்றும் மார்ச்சால சிசுவைப்போலத் தன் செயல் அறச் சிவன் வழித்தாய் நிற்கை அப் பிரபத்தி நெறி என்றும் அருளினுர்கள். (சித்தியார். 10. உரை) சிற்றறிவு:— மாயா கரணங்களைப் பொருந்தி அறியும் அறிவு. மாயா ஜந்நியஞானம் என்பது அதுவே, தேகம், இந்திரியம், அந்தக்கரணங்கள் முதலிய மாயா கருவிகளைத் துணையாக் கொண்டு விருத்தியுறும் ஞானம். அத்தகு சிற்றறிவின் நீங்குதலாவது:– யான் அறஞ்செய்தேன், யான் பிறர்க்கு உதவினேன், யான் பிறர்க்குக் கேடு பண்ணினேன். பிறர்

எனக்கு உதவினர், கேடு பண்ணினர் எனத் தனக்கும் பிறர்க்கும் சுதந்திரம் உள்ளதுபோல, வீடு மாடு பெண்டு பிள்ளை முதலிய பொருள்களை என்னிடத்தில் இறைவன் கூட்டினுன் என்று உணராமல், என் வீடு, என் மாடு, என் பெண்டு, என் பிள்ளை என்னும் தேகேந்திரிய அந்தக் கரண விருத்தி ஞானமும் இவற்றை என்னின் வேறு என்று அறியாமல் யானே என்னும் நினைவும் மாயா ஜந்நிய ஞானம் ஆம். அஞ்ஞானத்தைச் சிவஞானத்தாலே தீர்த்துச் சிவாபி முகமாய் நிற்றலாகும். இது 'நின்சிற் றறிவின் நீங்கி' என்றதா லுணர்த்தப்பட்டது. அச் செருக்கு ('யான்' 'எனது' என்பவை) இரண்டும் முறையே அகங்காரம் மமகாரம் எனப்படும். அவற்றையே அகந்தை மமதை எனலும் வழக்கம். திருவள்ளுவர் 'யான்எனதென்னுஞ் செருக்கு' எனமுர்.

சிவஞானத்தாலே சிற்றறிவைத் தீர்த்தலாவது:—

உலகில் உள்ளம் உரை உடல் (மநவாக்காயம்) என்னும் முப்பொறி (திரிகரணங்)களாலே செய்யப்படும் நல்லவையும் தீயவையும் ஆகிய வினைகள் எல்லாம் எனக்கு நீ இட்ட பணியே. 'உலகினில் என் செயலெல் லாம் உன் விதியே'. நீயே என்னுள் உயிர்க்குயிராயும் அறிவுக்கறிவாயும் நின்று இச்சா ஞானக்கிரியைகளைச் செலுத்தி, ஞானேந்திரியங்களாலே விடயங்களைப்பற்ற அறிவித்தும் அறிகின்ருய்; கருமேந்திரியங்களைக்கொண்டு தொழில்களைச் செய்வித்தும் செய்கின்ருய். ஆதலின், அந்தக்கரணங்களால் நிகழ்த்தும் இச்சையும் ஞானேந் திரியங்கள் பற்றுகிற ஞானமும் கருமேந்திரியங்கள் இயற்றுங் கிரியையும் முறையே உன் இச்சா சத்தியும் ஞான சத்தியும் கிரியா சத்தியும் ஏவி உடனிருந்து செய்யும் பிரேரகமே என்று இறைபணி நிற்றலேயாம். இவ் வுண்மையை 'அரனுல் செயல் எலாம் ஆதலும்'

அவன் சிந்தையுள் நின்று செய்து செய்விக்க (நீ) செய்தலும் (உன்) அறிவில் அறி'. என்று 'விதி'யை விதியாகவே அருளினர் ஆசிரியர்.

இறைபணி நிற்றல் ஆகிய இது வரற் பொருட்டு இதன் முன்னர்ச் செயற்பால தொன்றுண்டு. அஃது யாது? அவனே தானே ஆகிய அந்நெறியில் ஏகன் ஆதல். 'நம் செயல் அற்று இந்த நாம் அற்றபின் நாதன்றன் செயல்தானே என் றுந்திபற தன்னையே தந்தான் என் றுந்திபற' என்றது தலையாய அருணூல். இதில் முன்னர்க் கூறியது நம் செயல் அறுதல். அஃதாவது நாதன் செயலாதல். அடுத்துக் கூறியது நாம் அறுதல்— நாதன் ஆதல். இவ் விரண்டும் முறையே இறைபணி நிற்றலும் ஏகனுதலும் ஆகும். எல்லாம் சிவன் செயல் ஆதலை உணரப் பல்லூழிகாலம் பயிறல் வேண்டும். அப் பயிற்சி சிவோஹம் என்னும் உண்மையைப் பயப்பிக்கும். அப் பயிற்சி இன்றி ஏகனுதல் அரிதாகும். இறைபணி நின்று ஏகனுதலின் பயன் என்னை? அவன் (தத்) இவனைத் (துவம்) தானுக்குதல் அதன் பயன். அப்பயனையே முடிவாகத் தன்னையே தந்தான் என்று பின் உணர்த்திற்று அவ் வருணூல். இங்கு ஏகனுதல் என்றதன் கருத்து:— அத்துவிதக் கலப்பிற்குரிய இரண்டறுதல், 'ஏகன்' என்றதால் பிரமம் ஒன்றே உள்ளது. அஃது அல்லாத எல்லாம் மித்தை என்னும் வேற்றுக் கொள்கை இடம்பெற விடலாகாது. இச் சூத்திரம் சிவயோகம் உணர்த்துவது. அச் சிவ யோகத்தைச் சித்தாந்த சைவத்தின் மரபு பிறழாதுணர்தல் வேண்டும்.

''உள்ளும் புறம்பும் ஒருபொருளாம், அப்பொருளை
உள்ளும் புறம்பும் உறநோக்கி—உள்ளுணர்வோ
டேகம்ஆ காமல் இரண்டறவே நிற்றல்சிவ
யோகம்ஆம் என்றே உணர்'' என்றருளியது பரஞ்சோதி

மாமுனிவர் பாதசேகரரும் நம் சென்னி வாழ்பவரும் ஆகிய அருளாசிரியர் திருவாய் மலர்ந்த பரமாநந்த சாகரம்.

''ஈசன்அருள் நின்றசையின் எவ்வுயிருந் தானசையும்
ஆசில்அருள் இன்றி அசையாது—காசினியோர்
என்செயலே யானே எனதேஎன் றேதல்அவன்
றன்செயலோ அல்லவோ தான்.''

இச் 'சிவயோகம் நீங்கில் அருள்நூல் ஓதிக் கூடுஞ் சிவன் ருள் குறித்து' என்றும் அது கூறிற்று. இவ்வளவும் 'சிவம் ஆவாய் திடமே' என்றதில் அரதனச் சுருக்கமா யடங்கியுள்ளன.

*(1)* நல்ல சிவ தன்மம் *(2)* நல்ல சிவயோகம் *(3)* நல்ல சிவஞானம் என்று சரியை முதலிய நான் கனையும் மூன்றுகக் கொண்டு 'நல்ல சிவமுத்தி'யை உணர்த்தியது திருக்களிற்றுப்படியார். அதிற் கூறிய சிவயோகமும் ஈதேயாயினும், ஆதாரயோகம் நிராதார யோகம் எனப் பகுத்த பகுப்பில் தசகாரியத்துள் ஒன்றுய சிவயோகம் அடங்காது. திருக்களிற்றுப்படியார்க்குள்ள சிவப்பிரகாசர் உரையில் ஆன்ம யோகம் ஞான யோகம் சிவ யோகம் பக்தி யோகம் என்பனவும் கூறப்பட்டுள்ளன. அவ்வுரைக்குரிய சம்பிரதாயமும் பண்டிருந்ததுபோலும். மெய்கண்ட சித்தாந்த மார்க்கம் தோன்றிய பின்னர் மறைந்தவற்றுள் அதுவும் ஒன்று போலும். திருக் களிற்றுப்படியாரில்.

''சிவன்முதலே யன்றி முதல்இல்லை என்றும்
சிவனுடைய தென்னறிவ தென்றும்—சிவனவன
தென்செயல தாகின்ற தென்றும் இவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான்'' என்றும்

'மெய்ம்மைச் சிவயோகமே யோகம் அல்லாத யோகம் அவயோகம் என்றே அறி' என்றும் வருவனவற்றையும்

'பத்தியோ கங்கூடிப் பாசங் கெடஞான
சத்தியோ கங்கூடிச் சங்கையற—முத்திநிலை
கூடுஞ் சிவயோகங் கூடினுல் இன்பசுகம்
நீடும்அது தானுகி நில்'

இங்கே பக்தியோகம், ஞான யோகம், சிவ யோகம் என்றுள்ள மூவகையும் ஆராய்ந்துணர்தல் நன்று.

'காயத்தோ ரெல்லை கருதிக் கருத்தழிந்து
போயற்ரு ரின்பம் புணராத—மாயத்தீர்
ஊனே கருதாமல் உள்ளுணர்வோ டொன்றும்அது
தானே சிவயோகந் தான்.' என்னும் பரமானந்த சாகரத்தையும் உணரச் சிவயோகம் தெற்றெனப் புலப்படும்.

உ

சிவமயம்

## பதினொன்றாவது சூத்திரம்

ஆவிக் கனைத்தும் அரன்அறி வீப்பான்
உயிர்க்குப காரியென் றேதும்மெய்ந் நூல்கள்
பிறவிப் பெருங்கடற் பிழைக்கத் திருவடி
கருதுவார் இதய கமலத்து விதிப்படி
பூசனை புரியப் புண்ணியம்
பெருகும் ஆதலிற் பெறுவர்இன் னருளே.

இச் சூத்திரத்திலே சொல்லற்பாலது சிவபோகம். முன்னூல் ஒன்பதாவது சூத்திரத்திலே அக வழிபாட்டைக் கூறியது. அதனை இதிற் கூறியது என்னை எனில், இந்நூல் எல்லாத் திறத்திலும் முன்னூலை ஒத்துள்ளதேயாம். "பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி அழியா மரபினது வழி நூலாகும்". ஆயினும் முன்னோர் நூலின் முடிவு ஒத்திருத்தல் வேண்டும். அவ் வொப்பு ஒரு சிறிதும் குறைந்திலது. எங்கள் சிவாக்கிர யோகிகள் திருமரபில் நிலவும் சிவநெறிப் பிரகாசம் என்னும் அருணூலில் 208 ஆவது திருவிருத்தத்திலே,

"அறைந்தனம் முன்னே சைவசித் தாந்தமுத்தி
ஆன்மாவின் சிற்சத்தி அநாதி ஆணவத்தால்
மறைந்ததுதான் பருவத்தே சிவனருளி னாலே
மாசற்று நின்றநிலையே சிவத்தை மன்னி
உறைந்து வேறறவுப்பு நீருடனே நன்னீர்
உற்றதுபோல் ஓர்உணர்வாய் உவமை இன்றி
நிறைந்துபர மானந்தம் எய்திஅது தானும்
நிகழாமல் அதுதானாய் நிற்றல்என நேரே"

என்றும், முன்னே (188, 193 ஆம் திருவிருத்தங்களில்) அவை விரித்துரைத்தோம் என்றும் உணர்த்திய பின்னர், பத்தி பிரபத்திகளையும் அவற்றின்மேலாய ஞானம் எனப்படும் தசகாரியத்தையும் உபதேசித்தருளினுர். அதன் பிரபத்தியையும் பத்தியையும் அப் பத்தியின் உள் வெளி எனும் வகையையும் விளக்கி நூலை முடித் தருளினுர். அவ்வாறே இந்நூலும் முடிவுற வேண்டிப் பிரபத்தி பத்திமார்க்கத்துக்கு முக்கிய சாதனமான பூஜை இதிற் கூறப்பட்டது. படினும் முக்திக்கு முன்னரும் பின்னரும் பூஜை அத்தியாவசியகம். சிவபிரான் உயிர் களுக்கு உபகாரியாதலின் தன்மை முன்னிலை படர்க் கையாம் மூவிடத்தும் நின்று பெத்தம் முத்தி இரண்டிலும் அறிவிக்கத்தக்க எல்லாப் பொருளையும் அறிவித் தருளு வான் என்று உண்மை நூல்கள் கூறுகின்றன. அவ் வகையில் அறிவன அறிந்து, இயற்றுவன இறற்றிப் பிறவிப் பெருங்கடலைக் கடக்கவும் பேரின்பக் கரையை அடையவும் விரும்பும் அன்பர்கள் தம் உள்ளத் தாமரை யில், சிவாகமங்களில் விதித்தபடி சிவபூசை (அந்தர் யாகம்) செய்தால் சிவ புண்ணியம் பெருகும். அப் புண்ணியப் பெருக்கத்தால் அச் சிவனது இன்னருளாகிய சிவ ஞானத்தைப் பெறுவர்.

3. விளக்கம்: இச் சூத்திரத்தின் பொருளாவது என்ன வென்ருல், அகண்டாகார சொரூபரும், ஞான வடிவரும், மாயா காரியங்களோடு கூடாதவரும், சச்சி தானந்த வடிவரும், உயிர்கட்கு மாதா பிதாவாய் (அம்மையப்பராய்) உள்ளவரும், சுத்தவித்தை ஈசுவரம் சாதாக்கியம் விந்து நாதங்களைக் கடந்து உன் மனுஸ் தானத்திற்கு அப்பால் பிரகாசிக்கின்ற அநேக கோடி சூரியப் பிரகாசமமைந்த பரப்பிரம வஸ்துவே ஜீவர்கட்கு உபகாரம் செய்ய வேண்டிய நிமித்தம் சிவன் என்னும் பெயரை உடையவராய்க் கிருபையுள்ளவராகி உயிர்க ளிடத்தில் கலந்து நின்று அவ்வுயிரின் அறிவு விளங்

கும்படி செய்வர். அவ் அறிவை எவ்வாறு விளக்குவார் எனின் ஆண்டவன் ஆத்மோபகாரி என்று வேதாகமங்கள் முழங்குகின்றன. அதனைக் "காட்டிக்காண்டல்" என்பர். அவன் செய்யும் உபகாரம் அனைத்தும் அக் 'காட்டிக் காண்டல்' என்னும் ஒன்றில் அடங்கும். அவ்வுபகாரம் உயிர்கட்குத் தன்மை முன்னிலை படர்க்கை பாம் மூவிடத்தும் நிகழ்கின்றது.

1. தன்மையில் உணர்த்தும் உபகாரம்:— உயிர்க்குயிராய் நின்று உயிரின் இச்சா ஞானக் கிரியைகளை வளர்த்து வருவதும், அநாதியே ஞானத் தடையாய் நிற்கும் ஆணவத்தை நீக்குவதும், பெத்தத்தில் சப்த பிரபஞ்சங்களையும், அர்த்தப் பிரபஞ்சங்களையும் முத்தியில் தனது சொரூபத்தையும் அறிவிப்பதும் ஆகும். முத்தியில் ஜீவ போதம் அற்றுச் சிவ போதம் உற்று இடையறுது சிவமாய் நிற்றலும் தன்மையில் உணர்த்தும் அவனது உபகாரத்தின் விளைவேயாகும்,

2. முன்னிலையில் உணர்த்தும் உபகாரம்:—பெத்தத்தில் அவன் அவள் அதுவாய் முன்னிலையாய்த் அதனதன் வினைப்பயனும் தீமை நன்மைகளை ஊட்டி உணர்த்தல் (உதாரணம்) பூனை தன் குட்டிகளைப் பால் கொடுத்தும், பாதுகாப்பிடத்தில் வைத்தும், பக்குவத்தில் இரைதேடி ஊட்டியும் வளர்ப்பதை முன்னிலையாக் கண்டு நாமும் இப்படி வளர்க்கக் கடவோம் என்னும் அறிவை உயிர்கட்கு இறைவன் தோற்றும் உபகாரம். முத்தியில் செய்யும் உபகாரம் எல்லாம் சிவமாய்த் தோன்றப் பெறுதல்.

3. படர்க்கையில் உணர்த்தும் உபகாரம்:—நரக சொர்க்கம் முதலாகிய பரலோகத்தில் புண்ணிய பாபங்களால் வரும் இன்பத் துன்பப் பயன்களை வேதாகம

புராணங்களால் அறிவிப்பது. இவை தன்மையிலும் முன்னிலையிலும் தோன்ருத உண்மைகள்.

தன்மையில், தான் சிவமாய் நிற்கவும், முன்னிலையில் எல்லாம் சிவமாய்த் தோன்றவும் பெற்ற ஆன்மாவும் அவ்வாறு நின்றும் தோன்றியும் உணர்த்தும் (சிவமும் அத்துவிதமாய் ஞேயமும் ஆநந்தாதீதமுமான) குறை விலா நிறைவே படர்க்கையில் உணர்த்துதற் பயனுகும். இவ்வாறு மூவிடத்தும் நின்று உயிர்கட்கு உணர்த்தும் எல்லா உபகாரங்களேயும் **"ஆவிக்கனைத்தும் அரனறி விப்பான்"** என்ருர்.

பிறவிக் கடலில் உழன்று அது பொழுது பேரின்பக் கரையேற முயலும் பக்குவ சீலர்கள் தீக்ஷைகளைக் கிரமமாகப் பெற்று அந்தரியாகம் செய்து முத்திசாதனத்தைத் தேடிக் கொள்ளல் வேண்டும், தசகாரியம் எட்டாவது சூத்திரவுரையில் விளக்கப் பட்டமையால், அவற்றுள் முடிவாய சிவ போகத்தை மட்டும் தெளிவிக்க முன்னோர் மொழி பொரு ளிரண்டையும் பொன்னே யெனப் போற்றிக் கொள்வோம்.

உணரும் உணர்வும் உணர்த்தும் உணர்வும்
புணர உணர்வு புதைந்து—கணவனுடன்
ஏகமாய் அன்பகலா இன்புறுதல் நல்லசிவ
போகம் ஆம் என்றே புகல்.

இறைவனது சிற்சக்தியும் முத்திபெற நின்ற ஆன்மாவின் சிற்சத்தியும் வேறு இன்றி உடனுய் விரவி நிற்கும். அவ்விரு சத்தியும் ஒன்றை ஒன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே விடயித்துச் செல்லுமாறு செய்வது காணுமுபகாரம். ஐந்தாவது சூத்திரத்திற் கூறியது காட்டும் உபகாரம். இவ்வுபகாரம் பெத்தம் முத்தி இரண்டிலும் ஒரு தன்மையதாயுண்டு. ஏனைய

வற்றை யெல்லாம் கைவிட்டு இறைவனிடத்து ஏகனுதி அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யாதவனுய் நின்ற ஆன்மா இறைவன் அவ்வாறு அத்துவிதமாய் உடன் நின்று கருணையால் உபகரித்துவரும் உரிமையை நோக்குந் தொறும் அப் பொருளிற் செல்லும் இச்சை அடங்காமல் மிகும். அவ் விச்சையே ஆநந்தம் ஆக விளங்கித் தோன்றும். அவ் வானந்தமே இறை; அதுவே பேரின்பம். அப் பேராநந்தத்தை முத்தியுற்ற ஆன்மா அநுபவிக்கும். இவ்வநுபவமே சத்து, அடங்காது மீதூரும் இச்சையே ஆநந்தம். இதுவே சச்சிதாநந்தம் என்னும் முத்திலாபம் (வீடுபேறு). இது துரியாதீத நிலை யாகிய ஆனந்த போகவாழ்வு. முற் கூறிய சிவ யோகம் சிவ தரிசனம் இரண்டும் துரியமாகிய அருணிலை.

## பன்னிரண்டாவது சூத்திரம்

முத்திபெற் றோர்தம் மும்மல வாசனை
அகல அறிவினில் அரனைக் காண்க
சிவால யத்தையும் சிவவே டத்தையும்
ஆசா ரியனையும் அரன்எனத் தொழுக
அவனும் மறவான் அவனை மறவற்க
இறைஞானம் விளங்கி யினிது
பிறைவே ணியனடி பெற்றின் புறுகவே.

இது முன்னூலைப் போன்று சீவன் முத்தி நிலைக்குப் பரமுத்தியுறும் வரையில் வேண்டற் பாலனவாகிய அரன் கோயிலையும், அடியார் சிவவேடத்தையும், ஆசாரியனையும் அரன் எனத் தொழுதலும், மாலற நேயம்மலிதலாகிய மறவாமையும், அந்நேயம் மலிந்த அன்பரொடு மருவுதலும் உணர்த்துவது.

செம் மலர்போலுந் திருவடியைச் சென்று அடைய வொட்டாது தடைசெய்யும் மும்மல அழுக்கை ஞானப் புனலாற் கழுவுக. கழுவி அயராத அன்பால் அரன் கழல் அடைக. அவ்வாறு மலங்கழுவி மறவாத அன்பால் அரன் கழல் அடைந்த மெய்ஞ் ஞானிகளொடு மருவுக. அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் அர னென்றே வழிபடுக. இத்துணைப் பெறலரும் பேரின்பச் செல்வத்தை நல்கியருளிய ஆசாரியனாகிய அரனை மறவாது வழிபட்டு வாழ்க என்பது இதன் உட்கோள்.

சிவஞான போதத்திலே, மலர்த்தாள் சேரல் ஒட்டா மலம் கழுவி அன்பரொடு மருவி, மால் அறநேயம் மலிந்

தவர் வேடத்தையும் ஆலயத்தையும் அரன் எனத் தொழும் எனச் சீவன் முத்தன் செயலுணர்த்திற்று.

சிவஞான சித்தியாரிலே, கமலத்தாளிணை சேரல் ஒட்டா மலங்களறுத்துச் சிவநேசரொடும் செறிந்திட்டு, அவர் திருவேடத்தையும் ஆலயங்களையும் அரன் எனவே தொழுது இறைஞ்சி ஆடிப்பாடி 'எங்கும் யாம் ஒருவர்க்கும் எனியோம் அல்லோம் யாவர்க்கும் மேலானோம்' என்று இறுமாப்பு எய்திப் பிறை வேணியன் அடியார்க்கு அடியோம் என்று சிவஞானச் செயல் உடையார் (சீவன் முத்தர்) திரிந்திடுவர் என்றுள்ளது.

சிவஞான போதமாபாடியத் துரையில் உள்ள வாற்றை ஆராய்ந்துணர்தல் அறிஞர் கடனாகும். அருணந்திதேவ நாயனர் '**திங்கள் முடியார் அடியார்**' என்றருளியதைத் திருவுளத்திற்கொண்டு எம் ஆசிரியரும் இச் சூத்திரத்தின் முடிவில் '**பிறைவேணியனடி**' என்று முடித்தருளினர்கள்.

மும்மல அழுக்கை ஞானநீராற் கழுவுமாறு:—

(அ) ஆணவ மல சத்திகளாகிய மோகம் மதம் அராகம் விஷாதம் தாபம் சோஷம் வைசித்திரியமாம் ஏழன் வசமாகாமல் இருப்பது ஜீவன் முத்தர் ஆணவ மல வாசனையைப் போக்குதலாகும். [பக்கம் 22 பார்க்க]

மாயாமல வாசனையாகிய அழுக்கைக் கழுவுதலாவது:—

(ஆ) பொய்யை மெய் என்று மயங்கும்படி மயக்க அறிவை விளைப்பது மாயையின் செயல். தனுகரண புவன போகமாகிய மாயாகாரியப் பிரபஞ்சம் எல்லாம் பொய் என்று அறிந்து, அப் பொய்ப் பொருள்களிற்பற்று வைக்காமலும் வைத்த பற்றை வளர விடாமலும் முற்றப் போக்கி, இறைவன் திருவடிப் பற்றை மட்டும் கடைப்பிடித் தொழுகுதல்.

கன்மமல வாசனையாகிய அழுக்கைக் கழுவுதலாவது:—

(இ) யான் செய்தேன் பிறர் செய்தார் என்னும் சுட்டொழிதல், எல்லாம் இறைவன் செயல் என, 'ஆட்டு வித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே' என்பது முதலிய தேவாரத்தின் உட்கிடையை மறவாது போற்றி வருதல்.

இவ்வாறு மும்மல வாசனையும் அகல, அறிவில் அரனைக் காண்டலாவது சிவமேயாய் நின்றிடுதல். 'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்' என்ற சிவாகமவசனம் நோக்கிச் சிவாலயத்தைச் சிவனெனவே தொழுதல் வேண்டும். அகளமாய் ஆரும் அறிவரிய அப்பொருள் தன்னை உயிர்கள் அறியப் பல பல வேடம் ஆகி அங்கங்கே அவ்வுயிர்க்குயிராய் அறிவு கொடுத்து ஞான சொரூபத்தொடு செறிதலால் திருவேடம் சிவனுருவே யாகும். ஆதலின், சிவ வேடத்தையும் சிவன்எனவே வழிபட் டுய்க. சிவ வேடத்தாரைச் சிவன் என்றே வழிபட்டு வாழ்க. 'குருவே சிவம்' 'யார்க்கும் ஈனமிலான் ஞான குருவே, குருவும் இவனே (சிவனே), ஈசனும் இவன் (குருவே) தான் என்று இறைஞ்சி ஏத்து என விதித்தது சிவாகமம். 'யார்க்கும் ஈனம் இலான்' என்றது, சரியை யாளர், கிரியாவான்கள், யோகிகள் என்னும் முத்திறத் தெவர்க்கும் குறைவில்லானுய்ப் பாச ஞானம் பசு ஞானம் அற்று, அம் முத்திறத் தோர்க்கும் அவற்றை அறுவித்துச் சிவஞானமூர்த்திமானுவன் ஞானுசாரியன் என்றுணர்த் தற் பொருட்டு. எல்லா ஞானங்களும் மந்திரம் முதலிய வற்ருற் பெறலாம். திருவடிசேர் ஞானம் குருவருளா லன்றி வேறு எதனுலும் பெறல் இயலாது. 'ஆசான் அருளால் அடிசேர் ஞானம் வந்திடும். மற்று ஒன்ருலும் வாராது. மற்றவையும் (மந்திரம் மருந்து யோகம் மணி ரசகுளிகை தந்திரக்ரமம் முதலியவற்ருல் வரும் ஞானங் களும் சகலகலா ஞானங்களும் திரிகால ஞானங்களும் அணிமாதி ஞானங்களும்) அவனருளால்' மருவும் ஆதலின்

குருவைச் சிவனெனவே தொழுதுய்க. குருவும் உண்மைச் சீடனுகிய சீவன் முத்தனை மறவான். சீடனும் குருவை மறவற்க.

''தன்னை அறிவித்துத் தான்தானுச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழைஅலது'' என்னுந் திருவெண்பாப்

பகுதியில், (தன் உண்மை யறியாமல் குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பல்லாற்ருனும் அதனைத் தெரித்துணர்த்தி எத்தனையும் எளிய அவ்வுயிரை எத்தனையும் அரிய தாளுகும் வண்ணம் செய்தளித்த பெரியதோருதவியை அதன் பின்னர் மறக்கும் ஆயின், அஃது இதற்கு முன் அறியாமையால் மறந்த குற்றம் தீர்வதுபோலத் தீரும் இயல்புடையதொரு குற்றம் அன்று. இதைக் கழுவாய் இல்லாத வழுவாக் கூறியதுணர்க.

சீவன் முத்தர்க்கும் இச்சை ஞானம் கிரியை மூன்றும் வியாபரிக்கும். அவை வியாபரிக்குங்கால், இச்சா வியாபாரம் சிவ பத்தர்களோடு இணங்கும் இணக்கம் ஆக நிகழ்தற்பாலது. அல்லாதார் இணக்கம் என் செய்யும்?

''மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப் பிலார் தந்திறத்துச் சேர்வை''.

அச் சேர்வை அறப் பத்தரினத்துப் பித்தாய்ப் பரனுணர்விஞல் உணரும் மெய்த்தவராகிய சீவன்முத்தரை வினை மேவாது.

அம் முத்தரது ஞானம் வியாபரிக்கும் முறைமை:— எல்லாவற்றும் அடிப்படையாகிய புண்ணிய பாவரூப கன்மமலமும், மண்ணுரு முதலிய காரிய ரூபகாரணமான மாயாமலமும் அஞ்ஞானகரமான ஆணவ மலமும் வாசனுமாத்திரமாகவும் வந்து தாக்காதவாறு போக்குவதிலேயே ஞானம் நிலைத்துச் சிறுமானேந்தியின் சேவடிக்கீழ் இறுமாந் திருப்பதாகும்.

'முத்தி பெற்ருேர் தம் மும்மல வாசனை அகல அறிவினில் அரனைக் காண்க' என்றது இஞ் ஞான வியாபரம் பற்றியே.

கிரியா வியாபாரம் சிவாலயத்தையும் சிவ வேடத்தையும், ஆசாரியனையும் சிறப்பாகச் சிவஞானுசாரி யனையும் வழிபட்டுய்வது.

காண்க, தொழுக, மறவற்க, இன்புறுக என்னும் வியங்கோள் படர்க்கையன. காண்டல் அறிவில். (ஞானம்). தொழுதல் கிரியை. மறவாமை (இச்சை). இன்புறுதல் இந்நூற் பயனும் ஜீவந் முக்திப்பயனுமாம். ஆதலின் இவ்வருணூல் இன்பம் எனத் தொடங்கி இன்புறுக என முடிந்தது. உரையும் பரமாநந்தம் ஆம் என்று முடிவில் உணர்த்தி நிறைவுற்றது.

"காயம் பொறிகரணம் கால் இவற்றை ஒன்ருகும்
நேயம்உற நீங்கி நினைவொழிந்து—போய் அவிழ
நின்றநிலை நேராய் நிராலம்பம்பம் ஆகிவிடில்
அன்று பரமாநந்தம் ஆம்." (பரமானந்தசாகரம். 86)

திருச்சிற்றம்பலம்

இறை ஞானபோதம் உரை முற்றிற்று.

சிவாக்கிரயோகிகள் திருவடி துணை

மீனுட்சி சுந்தர தேசிகன் விரைமலர்த் தாள் துணை

ஞானப்பிரகாச தேசிகன் நாண்மல ரடி துணை



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 26 | செயய் | செய்ய |
| 14 | 8 | பன்னிரண்டாது | பன்னிரண்டாவது |
| 15 | 12 | பொழி | மொழி |
| 26 | கடைசி | கனவை | கனவைக் |
| 27 | 4 | பொறிகளும் | பொறிகளும் பிறகருவிகளும் |
| ,, | 21 | உண்டு | உண்டு என்றறியலாம். |
| 30 | 16 | காரண | கரண |
| 38 | 10 | ஆயினும் | ஆதலின் |
| 39 | 9 | அடைந்த | அமைந்த |
| ,, | 16 | முன்னர்ப் | முன்னர் |
| 42 | 3 | தாமரையுண்டு | தாமரையுண்டு |
| ,, | 4 | தாமரையுண்டு (இப்பொருள்) | (இல் பொருள்) |
| 44 | 14 | ஞான | ஞான |
| 45 | 8 | பிரஞ்ச | பிரபஞ்ச |
| 47 | 5 | என்றும் | என்றும் கூறினர். |
| ,, | 11 | அச்சத்தால் | அச் சத்தால் |
| 57 | 16 | நோன்பு | நோன்பு அன்பு |
| ,, | 18 | நர்பி | நாபி |
| 58 | 4 | சென்று | சென்று பற்றும் |
| 63 | 6 | வகை | வகையை |
| 64 | 3 | அறிவிப்பான் | அறிவிப்பன் |
| 65 | 15 | இறற்றி | இயற்றி |
| ,, | 22 | 3 | |
| 66 | 18 | முன்னிலையாய்த் | முன்னிலையாய் |
| 67 | 5+6 | ( ) | |
| ,, | 10 | அறிவிப்பான் | அறிவிப்பன் |
| 68 | 1 | ஏகனுதி | ஏகனுகி |
| ,, | 6 | மிகும். | மிகும். நோக்குதல் சித்து |
| ,, | 13—4 | சிவயோகம் சிவதரிசனம் | சிவ தரிசனம் சிவ யோகம் |
| 70 | 7 | எனி யோம் | எளியோம் |
| 72 | 6 | ( | |
| ,, | 24 | எல்லாவற்தம் | எல்லாவற்றிற்கும் |

நிறுத்தற் புள்ளிகளை ஆண்டாண்டுப் பொருத்தமுறத் திருத்திக் கொள்க.



சென்னை, சைவசித்தாந்த மகா சமாஜத்தின் திங்கள் இதழ் (தமிழ்) 'சித்தாந்தம்' ஆசிரியரும் மும்மொழிப் பெரும் புலவரும் தமிழ்த் தொண்டாகப் பல பல நூல்களைப் பதிப்பித்து வருபவரும் சைவத் திருவாளர். மு. அருணசலம் பிள்ளை, M. A. அவர்கள் 'தத்துவப் பிரகாசம்' என்னும் கிடைத்தற்கரிய பழைய சித்தாந்த சாத்திரத்தையும் அண்மையில் திருந்திய பதிப்பாக வெளியிட்டுதவினார்கள். அதனையும் பின்னர்க் குறித்த நூல்களையும் சைவசித்தாந்த மகாசமாஜம் 12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை 4 என்னுமிடத்திற் பெறலாம்.



| | | |
|---|---|---|
| திருக்களிற்றுப் படியார் அநுபூதியுரை | 1 | 50 |
| திருவாசக ஆராய்ச்சிக் குறிப்புக்கள் | 2 | 00 |
| தத்துவப் பிரகாசம் மூலமும் உரையும் | 8 | 00 |
| சைவசித்தாந்த நூல்கள் (அட்டவணை) | 0 | 50 |
| சைவ சமயச் சொற்பொழிவுகள் | 2 | 00 |
| ஞானியார் அடிகள் நினைவு மலர் | 1 | 00 |
| வைர விழா மலர் | 2 | 00 |
| திருவெம்பாவை திருப்பள்ளி யெழுச்சி பொன் விழா வெளியீடு | 1 | 25 |
| கந்தரனுபூதி யந்திரவுரையொடு | 1 | 25 |
| சைவ சமய சாரம் | 2 | 50 |
| நாலாயிரப் பிரபந்த விசாரம் | 1 | 00 |
| முருகன் முந்நூல் *0 40* அறுபத்து மூவர் | 0 | 06 |
| அறப் பயிற்சி மாலை *0 50* குகார்ச்சனைத் திருமந்திரம் | 0 | 06 |
| சிவஞான போதம் தமிழ் முதல் நூலே | 0 | 50 |
| சிவ ஞானசித்தியார் (சிவாக்கிரயோகிகள் உரை) | 0 | 50 |
| சிவலிங்க வழிபாடு *0 50* பிரதோஷ வழிபாடு | 0 | 20 |
| திருமயிலையும் பூம்பாவையும் | 0 | 50 |
| முருக வழிபாடு | 0 | 75 |
| சிவஞான போதம் எளியவுரை | 0 | 12 |
| ஷை தெளிவுரை (ராவ்பகதூர். க. அரங்கசாமி முதலியார்) | 0 | 50 |
| சித்தாந்தம் ஆண்டுக் கட்டணம் | 3 | 00 |
| சைவ சித்தாந்தம் (ஆங்கிலம் ஆண்டிற்கு நான்கிதழ்) | 5 | 00 |

பாம்பன் சுவாமிகள் நூல்கள் வேறு சிலவும் உள.